

# நாகம்மாவா?

சிறுகதைத் தொகுப்பு

நீல. பத்மநாபன்

# உள்ளே

# மறுபடியும்

மு ப்பது ஆண்டுகளுக்குப்பின் மீண்டும் இக்கதைகள் நூல் வடிவம் பெறுகின்றன. ‘இரண்டாவது முகம்’ தொகுதி கதைகளை அடுத்து 1974-76 காலகட்டத்தில் எழுதப்பட்ட 15 கதைகள் தேதி வாரி வரிசைக் கிரமத்திலேயே இங்கே தொகுக்கப்பட்டிருக்கின்றன.

ஆரம்ப காலக் கதைகளிலிருந்து இக்கதைகளின் வேறுபாடு என்ன என்று, இத்தனை ஆண்டுகளுக்குப் பின் சுய விமரிசன நோக்கில் இவற்றைப் புரட்டும்போது எனக்குத் தூக்கலாகப் பட்டவை: காலம் காலமாக நம் ஊனிலும் உயிரிலும் கலந்திருக்கும் தொன்மங்கள்; குடும்பத்துக்குள்ளே சந்தர்ப்பச் சூழ்நிலைகளால் நிகழ்ந்துவிடக்கூடும் அசம்பாவிதங்களை, ஒழுக்க நெறிப் பிறழ்வுகளை வெறித்தனமாக குத்து, வெட்டு, ரத்தம் என்றெல் லாம் குரூரமாக்காது சம சித்தத்துடனும் சமயோசிதமாகவும் சமாளிக்கும் முதிர்ச்சி; சமூகத்துடன் தனி மனித மனச்சாட்சியை ஒத்துப் போக வைக்க அனுபவிக்கும் சிரமம். என்னை அலட்டிய வற்றை இப்படிச் சொல்லிக்கொண்டே போகலாம் என்று தோன்றுகிறது.

கையாளும் முறையில், கூடிய மட்டும் பழகித் தேய்ந்த சொற்களை அகற்றி புதிய வார்த்தைகளைத் தேடும் முயற்சி. மேலும், சொற்களை அதிகமாக விரயம் செய்யாது சுருங்கச் சொல்லும் ஆர்வம்.

இவ்வாறு உருவத்திலும் உள்ளடக்கத்திலும் இன்னும் சொல்ல என் நெஞ்சம் அலைமோதுகின்றது. ஆனால், எழுதியவனின் கணிப்புகள், மறு மதிப்பீடுகளுடன் இன்றைய, நாளைய வாசகர்கள் எத்தனை தூரம்

ஒத்துப்போகிறார்கள் என்பதைப் பொருத்துத்தான் இக்கதைகள் மேலும் வாசிக்கப்படும், மறு பதிப்புகள் காணும் என்பதில் சந்தேகமில்லை.

**திருவனந்தபுரம்**
19.09.2010

**நீல. பத்மநாபன்**

**டாக்டர் சி. கனகசபாபதி,**

தமிழியல் துறை
மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம்,
மதுரை 625 021

# ஆய்ந்துரை

சிறுகதைப் படைப்புக்கு நடப்பியல் போக்கை மிகுதியும் பின் பற்றி வரும் தமிழ் எழுத்தாளர்களில் ஒருவர் நீல. பத்மநாபன். நடப்பியல் போக்கு என்பது சமுதாய - தனி மனித வாழ்க்கையில் உள்ளதை உள்ளவாறு எழுதுவது; உள்ளதைப் பற்றிய கருத்தைக் குறிப்புமொழியில் சொல்லாமல் சொல்லிக் காட்டுவதைக் கொண்டிருப்பது.

நீல. பத்மநாபனின் நடப்பியல் போக்கில் இரண்டு வகைகளைக் காண முடிகிறது. 'செய்தித் தொகுப்பு நடப்பியல்' (Documentary Realism) என்பது முதல் வகை; தான் நேரில் கண்ட காட்சியை நேரில் நடப்பதுபோல், நடந்ததுபோல், படம் பிடித்துக் காட்டுவது இது. 'விமரிசன நடப்பியல்' (Critical Realism) என்பது இரண்டாவது வகை. தான் நேரில் கண்டதைத் தன் விமரிசன நோக்கில் கூறுவது இது. இவ்விரண்டையும் சமுதாயப் பார்வை யிலோ, உளவியல் பார்வையிலோ, இரண்டும் கலந்த பார்வை யிலோ அவர் புலப்படச் செய்கிறார். முதலில் இந்தத் தொகுப்பின் பதினைந்து சிறுகதைகளையும் இரண்டு நடப்பியல் வகைகளில் பிரித்துக் காணலாம்.

## I. செய்தித் தொகுப்பு நடப்பியல்

1. குழந்தையும் தெய்வமும்: உடன் பிறந்தானின் மனைவியுடன் உறவு கொள்ளும் சமுதாய வழக்கம். சமுதாயப் பார்வை.

3. அபஸ்வரங்கள்: மூளைக் கோளாறுகொண்ட கணவன், மனைவியைத் துன்புறுத்துதல். உளவியல் பார்வை.

6. பதர்: நெல்லில் பதர் இருப்பதுபோல் மனிதர்களில் தாயை மதிக்காத பதரும் இருக்கிறான். சமுதாயப் பார்வை.

7. வீடு திரும்புதல்: திருமண வயது மிகுதியும் கடந்துவிட்டதால் வரும் மனப் பாதிப்பு. உளவியல் பார்வை.

9. காவல்: நாயைக் கண்டால் பயம். உளவியல் பார்வை.

11. தூண்டுதல்கள்: பாலியல் தூண்டுதல்களின் மிகுதியால் மூளைக் கோளாறு உண்டாதல். சமுதாய உளவியல் பார்வை.

12. அந்நியன்: நண்பனாகப் பழகிய வீட்டில் அந்நியனாக விரட்டப்படுதல். சமுதாய உளவியல் பார்வை.

13. போதை: குடி போதையின் விளைவுகள். சமுதாய உளவியல் பார்வை.

14. தேடுகிறவர்கள்: கூட்டமும் ஆரவாரமும் நிறைந்த இடத்தி லும் தாம் ஏதோ ஒன்றைச் சிந்தனையோடு தேடல். உளவியல் பார்வை.

## II. விமரிசன நடப்பியல்

2. சமூக ஜீவி: சமுதாய உயிராக வாழாமல் ஏமாற்றும் போலியாக வாழும் மனித நிலைமை. சமுதாயப் பார்வை.

4. மாத்திரை: டாக்டரின் புரியாத கையெழுத்தால் மருந்துக் கடையில் மாத்திரையை மாற்றிக் கொடுப்பதால், நோயாளியின் உயிருக்குத் தீங்கு நேர்கிறது. சமுதாயப் பார்வை.

5. இல் அறம்: பணம் சேர்க்கும் பேராசையால் இல்-அறம் அறமில்லாமல் போகிறது. சமுதாயப் பார்வை.

8. மோகபங்கம்: மனமுறிவும் பாலியல் தடுமாற்றமும் கொண்ட இளைஞனின் நிலையும் தந்தையின் மனப் பாதிப்பும். உளவியல் பார்வை.

10. விருந்து: பணக்கார வீட்டுப் பெண்ணை மணந்துகொண்ட நடுத்தர வர்க்க மனிதன் குறைத்து மதிக்கப்படுதல். சமுதாயப் பார்வை.

நீல. பத்மநாபன் இந்தத் தொகுப்பில் 10 சிறுகதைகளைச் செய்தித் தொகுப்பு நடப்பியலிலும் 5 சிறுகதைகளை விமரிசன நடப்பி யலிலும் எழுதியுள்ளார்.

நாகம் பற்றிய நம்பிக்கை, நாயைக் கண்டால் பயம் என்ற கதைக் கருக்கள் தனி மனித உள்ளத்தில் இல்லாதவற்றை வைத்து எழுதப்பட்டவை அல்ல. இந்தச் சிறுகதைகளின் நடப்பியல் ஒரு பக்கம். ஒருவன் தான் நண்பனாகப் பழகிய வீட்டிலிருந்து அந்நியனாக விரட்டப்படுகிறான் என்ற கதைக் கருவும் செய்தித் தொகுப்பாகவே வெளியிடப்படுகிறது. ஆனால், அவன் அந்நிய னாக விரட்டப்படுவதற்கான காரணம் பூடகமாக உணர்த்தப் படுகிறது. இந்தச் சிறுகதையின் நடப்பியல் இன்னொரு பக்கம். மூளைக் கோளாறுகொண்ட கணவன் மனைவியைத் துன்புறுத்து கிறான் என்ற கதைக் கருவும் செய்தித் தொகுப்பாக இருந்தாலும் அவன் மூளைக் கோளாறு அடையக் காரணம் என்ன என்று தெரியவில்லை. ஆனாலும், அவன் மனைவி படும் துன்பம் படிப்பவர் நெஞ்சை நெருடுகிறது. இந்தச் சிறுகதையின் நடப்பியல் வேறொரு பக்கம். இப்படிப் பார்க்கிறபோது நீல. பத்மநாபனின் செய்தித் தொகுப்பு நடப்பியல் என்ற சிறுகதைப் போக்கு, சுவைக்கத் தக்கது என்று கூறத் தோன்றுகிறது.

மேலும் இந்தத் தொகுப்பில் பார்க்கிறபோது, நீல. பத்மநாபனின் விமரிசன நடப்பியல் என்ற சிறுகதைப் போக்குதான், மேலே காட்டிய செய்தித் தொகுப்பை விடவும், சில சிறுகதைகளில் உயர்ந்ததாகப் புலப்படுகிறது. பணக்கார மாமனாரின் வீட்டு விருந்துக்கு வந்த ஏழை மாப்பிள்ளை படும் அவமானமும் அவதியும் 'விருந்து' என்ற சிறுகதையில் மிகையாகக் காட்டப் பட்டதாகக் கூற முடியாது. தன் வீட்டு

நடையில் தான் போட்ட மணலை அக்கிரமக்காரர்கள் வைதுகொண்டே அள்ளிக்கொண்டு போவதையும், இதைத் தட்டிக் கேட்காமல் ஆதரித்த கும்பலை யும் காணும்போது, படித்து உத்தியோகம் பார்க்கும் அந்த நடுத்தர வர்க்க மனிதன் ஆத்திரமும் அவதியும் அடைவது வெறும் செய்தியாக அல்லாமல் விமரிசனத்துடன் வெளியிடப்படுகிறது. இது 'சமூக ஜீவி' என்ற சிறுகதையில் வருவது. இப்படிப்பட்ட சிறுகதைகள் சமுதாயப் பார்வையுடன், காரணம் கலந்திருப் பதால் நடப்பியலில் உயர்ந்தன என்று மதிப்பிடலாம்.

இந்தத் தொகுப்பில் அவருடைய சிறுகதைக்கு மையமாக நிகழ்ச்சியையோ, கதைப் பின்னலையோ, நீல. பத்மநாபன் வைக்கவில்லை. நிகழ்ச்சிக்குப் பின்னால் இயங்கும் மனப் பாதிப் பையே சிறுகதை மையமாக அமைக்கிறார். மனப் பாதிப்பு என்ற மையத்தை 'அவன்' என்ற படர்க்கைக் கூற்றில் அமைத்தாலும் சரி, 'நான்' என்ற தன்மைக் கூற்றில் அமைத்தாலும் சரி, உரையா டல் அமைப்பில் உருவாக்குகிறார். ஒவ்வொரு உரையாடலிலும் பின்னோக்கிய மனப் பாதிப்பையே காண முடிகிறது. பெரும் பாலும் சமுதாய, குடும்ப உறவுச் சிக்கல்களையே கதைப் பொருளாகத் தேர்ந்தெடுக்கிறார் நீல. பத்மநாபன். ஆனால் உறவுச் சிக்கல்தான் அவருடைய சிறுகதை மையம் என்று சொல்லிவிட முடியாது. உறவுச் சிக்கலால் பாதிக்கப்படும் மன நிழல்தான் பெரும்பாலும் அவருடைய சிறுகதை மையம். இப்படிப்பட்ட பின்னோக்கிய மன நிழலை, 'நாடகீயமான' உரையாடல் அமைப்பில் அவருடைய சிறுகதை உருவமாகப் படைக்கிறார் நீல. பத்மநாபன். அவருடைய நாடகீயமான உரையாடலில் மனம் பாதிக்கப்பட்ட ஒரு பாத்திரமும் அதைக் கேட்கிற மற்றொரு பாத்திரமும் பெரும்பாலும் பங்கு கொள்கிறார்கள். சில சிறுகதைகளில் கேட்கிற பாத்திரங்கள் பலராகவும் இருக்கக் காணலாம்.

மேலே சொன்ன மைய விளக்கத்தையும் உருவ உத்தியையும் ஒரு சில சிறுகதைகளை உதாரணமாகக் கொண்டுபார்க்கலாம். 'குழந்தையும் தெய்வமும்' என்ற சிறுகதையில் ஒரு தாய் தன் இளைய மகன் மூத்த மகனின் மனைவியுடன் உறவுகொண்ட காரணத்தால் பிறந்துள்ள

குழந்தையைப்பற்றி எண்ணிப் பார்க் கும்போது அடையும் மனப் பாதிப்பு வெளியிடப்படுகிறது. அந்த ஆயாவும் வீட்டுக்கார அம்மாவும் பேசுகிற உரையாடலில்தான் கதை பின்னப்படுகிறது. அந்த உரையாடலில் ஆயாவின் பின்னோக்கு, உறவுச் சிக்கலில் சுழன்று வருகிறது. 'அபஸ்வரங்கள்', 'மாத்திரை', 'இல்-அறம்', 'மோகபங்கம்', 'காவல்', 'தூண்டுதல்' என்று பல சிறுகதைகளை நீல. பத்மநாபனின் இந்தத் தனித் தன்மைக்கு எடுத்துக் காட்டலாம்.

உறவுச் சிக்கலான உரையாடலின் பங்கினைக் குறைவாக இடம் பெறச் செய்து, மனப் பாதிப்பை உணர வைத்து அமைக்கும் முறையிலும் சில சிறுகதைகள் நீல. பத்மநாபன் எழுதியுள்ளார். பணக்கார மாமனாரின் வீட்டு விருந்தில் ஏழை மாப்பிள்ளை படும் மனப் பாதிப்பு (விருந்து) இப்படிப்பட்டது. 'சமூக ஜீவி', 'அந்நியன்', 'நாகம்மாவா' ஆகிய சிறுகதைகளையும் அவருடைய தனித்தன்மை வீச்சுக்கு எடுத்துக் காட்டலாம்.

மேலே சொன்ன சிறுகதை மையத்துக்கு ஏற்றபடி கதைத் தொடக்கத்தை வரைகிறார் நீல. பத்மநாபன். மனம் பாதிக்கப்பட்ட பாத்திரமோ, அந்தப் பாத்திரத்தின் வருகையை வீட்டில் அறிவிக்கும் வேறொரு பாத்திரமோ, வீட்டுக் கதவைத் தட்டுதல், வீட்டு நடையில் வந்து பார்த்தல் என்ற தொடக்கம், பல சிறுகதைகளில் காணப்படுகிறது. வியப்பு அல்லது அச்சம் என்ற உணர்ச்சியுடன் வீட்டுக்குள் மனம் பாதிக்கப்பட்ட பாத்திரம் வருவது திரும்பத் திரும்ப இடம் பெறுகிறது. நீல. பத்மநாபன் ஒரு பொறியியலாளர் என்ற புறத் தகவலின்படி பார்க்கிறபோது, வீட்டின் பல பகுதிகளையும் மின் விளக்குகளையும், ஒளியும் இருளும் விளையாடுவதையும், அங்கு மனித உருவங்கள் மாறி மாறித் தென்படுவதையும் பல சிறுகதைகளின் தொடக்கத்தில் அவர் வர்ணித்திருப்பது பொருத்தமானது என்று தெரிகிறது.

மேலும் அவருடைய கதைத் தொடக்கம், கதையில் பின்னல் வரவிருப்பதை உள்ளுறையாகக் காட்டுவதாக அவரால் அமைக்கப் படுகிறது. உதாரணமாக 'அந்நியன்' என்ற சிறுகதையின் தொடக்

கத்தில் தூங்குமூஞ்சி மரம் சுட்டப்படுகிறது. இதில் வரும் வீட்டுக் காரரின் மூத்த தாரம் படுத்த படுக்கையாகத் தூங்கிக்கொண்டிருக் கிறாள் என்ற செய்தி கதை முடிவுக்குமுன் குறிக்கப்படுகிறது. ‘நிழல் மூட்டையாகத் தெரிந்த வீடு’ என்ற கதைத் தொடக்க வர்ணனையின்படியே கதை வளர்ச்சியில் அந்த வீட்டில் நடப்ப தெல்லாம்- பேசுவதெல்லாம் மூடுமந்திரமாக இருக்கிறது. ‘குழந்தையும் தெய்வமும்’ என்ற சிறுகதையின் தொடக்கத்தில் ஆயா அரிசியை மாவாக்கும் உருமாற்றம் செய்கிறாள் என்றும், வீட்டுக்கார அம்மா மாவைச் சல்லடையில், சொளகில் அரித்துக் கொண்டிருக்கிறாள் என்றும் காட்டப்படுகிறது. இந்தக் கதையில் ஆயா, தன் இளைய மகன் மூத்த மகனாக உருமாறியதையும், தன் கணவனின் அண்ணன் தன்னிடம் உருமாறி வந்ததையும் எடுத்துரைப்பதைத் தொடக்க வர்ணனை குறிப்பாகச் சுட்டியது என்று கொள்ளலாம். இப்படியே வேறு சில சிறுகதைகளிலும் பயிரின் வளர்ச்சியில் அதன் விதையைக் காண வைக்கும் உத்தி இடம் பெறுகிறது.

இத்தொகுப்பில் நீல. பத்மநாபனின் ‘தலைமுறைகள்’ நாவலில் வந்ததுபோல வட்டாரப் பேச்சு வழக்குகள் ஆசிரியர் கூற்றிலும் பாத்திர உரையாடலிலும் மிகுந்த அளவில், மண்ணின் மணம் கமழச் செய்யும்படியாக இடம்பெறவில்லை என்பது உண்மை தான். ஆனால், சில பாத்திரப் பெயர்கள் மற்ற வட்டார மக்கள் கேள்விப்படாதவை. பின்னோக்கிய மனப் பாதிப்பும், நாடகீய உரையாடலும், வீட்டு வாசல் பின்புறமும், மின் விளக்கு ஒளி வேறுபாடுகளும், சமுதாய குடும்ப உறவுச் சிக்கலைக் கதைப் பொருளாக்கி எழுதும் பாங்கும் ஒன்று சேர்ந்து நீல. பத்மநாபனின் தனித் தன்மையை எடுத்துக் காட்டுகின்றன.

# 1. குழந்தையும் தெய்வமும்

உ டம்பு ஒருவித தாள லயத்துடன் ஆட, ஆயாவின் கையிலிருந்து உரலில் விழுவதும், மேலே எழும்புவதுமாக இருந்தது உலக்கை... குதிர்ந்த பச்சை அரிசி, மாவாக உருமாற்றம் பெற்றுக் கொண்டிருந்தது.

நான் கீழே உட்கார்ந்துகொண்டு மாவைச் சல்லடையால் சொளகில் அரித்துக்கொண்டிருந்தேன். சல்லடையில் மிதந்த அரிசித் துகள்களை மறுபடியும் உரலில் தட்டினேன்.

என் குழந்தைகள் சற்று நீங்கி மஞ்சள் நிறப் போக்கு வெயிலில் உற்சாகமாகப் பாண்டி விளையாடிக்கொண்டிருந்தார்கள். ஆயாவின் ஒன்றரை வயசுப் பேரக் குழந்தை கீழே தவழ்ந்தவாறு, கானாவாழைக்குள்ளிருந்து லேசாகத் தலை நீட்டிப் பார்த்துக் கொண்டிருந்த பூ மொட்டை வளைத்துப் பிடிக்க முயன்று கொண்டிருந்தது.

கொஞ்சம் முந்தி இந்தக் குழந்தையை இடுப்பில் வைத்துக் கொண்டு, 'இந்த ஞாயிற்றுக்கிழமை ஒருநாள்தான் விச்ராந்தியா இருக்க முடியுது. இப்போவெல்லாம் சனிக்கிழமைகூட இஸ்கூலை வச்சுடுறாங்க...' என்று சொன்னவாறு வந்த ஆயா விடம், 'பிள்ளைங்க கொஞ்ச நாளா புட்டு வையின்னு தொல்லை பண்ணுறாங்க, மூணு படிப் பச்சை அரிசி குதிரப் போட்டேன். இன்னிக்குப் பார்த்துப் பாழாய்ப்போன அந்தச் சக்கு வேலைக்கே வரல்லே... நீயாவது சித்தே இடிச்சுத் தருவியா? நான் அரிச்சு வறுத்துக்கிறேன். இப்போவெல்லாம் உலக்கை போட்டால் எனக்கு நெஞ்சில் ஒரு வலி வந்துருது...' என்று நான் சொன்ன போது,

‘சரியம்மா…’ ண்ணு சொல்லி, குழந்தையைக் கீழே விட்டுவிட்டு, உலக்கையைக் கையில் எடுத்துக்கொண்டாள்.

உஸ் உஸ் என்று மூச்சு இரைய, வியர்வை வழிய, பதக் பதக்கென்று உலக்கையை உரலில் போட்டுக்கொண்டிருந்தவள், இடையில் சிறிது நிறுத்திவிட்டுத் தன் பேரப் பையனைத் திரும்பிப் பார்த்தாள். அவன் இதற்குள் வேலியின் அருகில் போய் விட்டிருந்தான். உலக்கையை ஒரு பக்கம் சாய்த்து வைத்துவிட்டு, ‘டேய்… போக்கிரி. அசல் அவன் அப்பனைப்போல்தான் குறும்பு. இப்பவே வேலியைத் தாண்டத்தான் வழி பார்க்கிறான்…’ என்றவாறு அவனைப்போய்த் தூக்கிக்கொண்டுவந்து என் அருகில் விட்டாள். அவன் ‘ஆ ஊ’ என்று என்னைப் பார்த்து அவன் மொழியில் என்னவோ புகார் சொல்லிக் கையை ஆட்டினான்.

மீண்டும் அவள் மாவிடிக்கத் தொடங்கியதும் நான் கேட்டேன், ‘இது உன் மகன் குழந்தையா, மகள் குழந்தையா?’

‘மகன் கொளந்தை’ என்று சொல்லி என்னை நோக்கி, விஷமமாகச் சிரித்துவிட்டு, ‘எந்த மகன் கொளந்தைன்னு சொல்லுங்களேன் பார்ப்போம்…’ என்றாள் அர்த்தபுஷ்டியோடு.

ஒரு கணம் எனக்கு அவள் கேள்வியின் தாத்பரியம் புரியவில்லை. நான் விழிப்பதைக்கண்டு அவளுக்கு ஒரே குஷி.

‘என்ன ஆயா… உனக்கென்ன பைத்தியமா? உன் மூத்த மகன் வேணுவுக்கும் மகள் வள்ளிக்கும் மட்டும்தானே கல்யாணம் ஆயிருக்குது. மகன் குழந்தையானால், உன் மூத்த மகன் வேணுவின் குழந்தையாக மட்டும்தானே இருக்க முடியும். இதிலென்ன சந்தேகம்?’

ஆயாவுக்கு இப்போ சிரிப்பு பொத்துக்கொண்டு வந்துவிட்டது. மாவிடிப்பதை நிறுத்திவிட்டு, ‘அம்மா நீங்க தோத்துட்டீங்க… கொளந்தையை ஒரு தடவை நல்லாப் பார்த்துவிட்டுச் சொல்லுங்கோ… எந்த மகன் கொளந்தை?’

நான் குழந்தையைத் தலை திருப்பிப் பார்த்தேன். அவன் தரையில் ஊர்ந்துகொண்டிருந்த ஒரு பிள்ளையார் எறும்பைக் கையால் பிடிக்கத்

தீவிரமாய் முயற்சித்துக் கொண்டிருந்தான். இதழோரத் தில் உமிழ் நீர் வடிந்தது. பார்க்க ஐஸ்வரியமாகவே இருந்தான். மாநிறம், அவன் அப்பாவைப்போல்...

பிறகேன் அவள் இப்படி விடுகதை போடுகிறாள்...

'எனக்கென்னமோ ஆயா. ஒன்னுமே புரியலே... நீ இப்படி மூடு மந்திரமாப் பேசினா எனக்கென்ன தெரியும்?' என்றேன் நான் என் தோல்வியை ஒப்புக்கொண்டு.

'சரி... நானே சொல்லிவிடுகிறேன். இதுஎன் கடைசி மகன் செல்லப்பாவின் கொளந்தை...'

இப்போ ஆயா வாய் விட்டு சிரிக்கவில்லையானாலும், வெற்றிலை போட்டுச் சிவந்த அவள் உதட்டு நுனியில் ஒரு சிரிப்பு திமிறிக்கொண்டு நிற்பதுபோல்...

எனக்கு ஒன்றும் புரியவில்லை.

'என்ன ஆயா... செல்லப்பனுக்கு இருபது வயசுகூட இருக்காதே... அதுக்குள்ள அவனுக்குக் கல்யாணமாயிட்டுதா?'

'என்னம்மா, கல்யாணமானாத்தான் பிள்ளைக்குத் தகப்பனாக முடியுமா?' என்னிடம் திரும்பிக் கேட்டாள் அவள்.

எனக்கு ஒரே குழப்பம்...

'அப்போ பிள்ளைக்கு அம்மா?' என்று நான் கேட்டபோது 'என் மூத்த மருமகள்' என்றாள் வெடுக்கென்று.

'என்ன?'

'அம்மா... என் மூத்த மகன் பெண்டாட்டி கனகம்...'

அரிப்பதை ஒரு கணம் நிறுத்திவிட்டு, அவள் முகத்தைத் தலை தூக்கிப் பார்த்து 'என்ன ஆயா உளறுறே?' என்றேன்.

'ஒன்றும் உளறல்லே... உள்ளதைத்தான் சொல்றேன்...'

இப்போ உலக்கை இத்தனை நேரமாக விழுந்ததைவிட வேகமாக விழத்தொடங்கியது. அரிசி தூளாகிக்கொண்டிருந்தது.

நான் ஒன்றும் கேட்கவில்லை. மௌனமாக மாவை அரித்துக் கொண்டிருந்தேன்.

‘ஆமாம் அம்மா... இதெல்லாம் என் வீட்டுப் பக்கத்தில் எல்லோருக்கும் தெரிஞ்ச சங்கதிதான்; ரகசியம் ஒண்ணும் இல்லே. வேணுவுக்குப் பட்டாளத்தில் வேலை. ரெண்டு மாச லீவில் வந்திருந்தப்போ பாலக்கரையிலிருந்து இந்தக் கனகத்தை நான்தான் போய்ப்பார்த்து அவனுக்குக் கட்டி வச்சேன். லீவு முடிச்சு அவன் வேலைக்குப் போனதுக்கு அடுத்த மாசம் அவன் அப்பா செத்தார். அதுக்கும் இங்க வந்து ஒரு வாரம் நின்று விட்டுப் போனான். அவன் போன மூணு மாசம் கனகம் வழக்கம் போல் மாசத்துக்கு மூணு நாலு நாள் விலகி இருந்து கொண்டு தான் இருந்தாள். நாலாம் மாசக் கடைசியில் நான் அவகிட்டே கேட்டேன், ‘என்னடி... இந்த மாசம் நீ விலகி இருந்து காணவில்லையே...’ அப்படின்னு. அதுக்கு, ‘எனக்குக் கல்யாணத்துக்கு முந்தி இருந்தே இப்படித்தான் அத்தே... சில சமயங்கள் ரெண்டு மாசத்துக்கு, மூணு மாசத்துக்கு ஒரு முறைதான் வரும்’ அப்படின்னு அவள் சொல்லிவிட்டாள். ரெண்டு மாசம்கூட குளிக்கல்லே... வாந்தியும் தலைச் சுற்றலும் எல்லாம் தொடங்கி விட்டது. தைவிளை ஆஸ்பத்திரிக்குக் கூட்டிக்கிட்டுப் போய்க் கேட்டபோது, மூணு மாசம் கர்ப்பமுன்னு சொன்னார் டாக்டர்.

‘அடப்பாவி. யாராம்?’

‘நானும் இப்படித்தான் அவகிட்டே கேட்டேன்... ‘உன்னை எங்கிட்ட ஒப்படைச்சுகிட்டுப் போயிருக்கான் உன் புருஷன். நாளைக்கு அவன் வந்து, நான் போய் ஆறு மாசம் ஆகுது. இப்போ என் பெண்டாட்டிக்கு மூணு மாசம் கர்ப்பமுண்ணா... அப்படின்னு எங்கிட்டே கேட்டா நான் என்ன பதில் சொல்லுவேன்?’ அப்படி இப்படின்னு எல்லாம் கேட்டேன். அவ வாயைத் திறந்தாத்தானே... எனக்கா கையும் விளங்கலே, காலும் விளங்கலே. நாள் செல்லச் செல்ல அவள் வயிறு

பெரிசாகிக்கிட்டிருப்பதைக் காணக் காண மனசு திக்கு திக்குண்ணு அடிக்குது... அன்ன ஆகாரம் தொண்டைக் குழியை விட்டுக் கீளே இறங்க மாட்டேங்குது.... ஒரு நாள் அவளைக் கூட்டிக்கிட்டுப் பாலக்கரைக்குப்போய் அவள் அம்மாகிட்டே விட்டு, விஷயத்தைச் சொல்லிவிட்டு வந்துவிட்டேன். பிறகு பிரசவமாச்சு. ஆண் கொளந்தையின்னு சேதி வந்தது. அவனை எப்படி எளுதி அறிவிப்பதுன்னு தெரியாம நான் அவஸ்தைப் பட்டுக்கிட்டிருந்தேன்... அப்போதான் அவன் வருவதா காயிதம் வந்தது... நான் மயக்கம்போட்டு விளவில்லை, அவ்வளவு தான்... நெஞ்சு சிதறிப் போய்விடுவதைப்போல் படக்குப் படக்குன்னு அடிச்சுக்கத் தொடங்கிவிட்டது... வயிற்றுக்குள்ளே சங்கடம்... மனசில் சில மாதிரி சந்தேகம்... வீட்டுக்கு வந்து போன எல்லாருக்க மூஞ்சியும் மனசில் தெரியுது... திடீருண்ணு எறும்பு ஊர்வதுபோல் ஒரு சந்தேகம்... நான் காலம்பர வீட்டை விட்டு இறங்கினா, பத்து கான்வெண்டு கொளந்தைங்களை இஸ்கூலுக்கு இட்டுக்கொண்டுபோவது, அவுங்களுக்கு மத்தியானம் சாப்பாடு கொண்டுபோவது, சாயந்திரம் வீட்டுக்கு இட்டுக்கொண்டு வருவது, அப்புறம் சந்தைக்குப்போய் சாமான் எல்லாம் வாங்கிவிட்டு வீடு வந்து சேர குறஞ்சது ராத்திரி ஏளு மணியாகி விடும். கெட்டிக் கொடுத்திருக்கும் மூத்த மகள் வள்ளிக்க தங்கச்சிகள் ரெண்டு பேரும் வீட்டு வேலைக்குப் போவாங்க... அவங்களும் நான் வீட்டுக்கு வரும் நேரத்தில்தான் வருவாங்க... அடுத்த ரெண்டு பையன்மார்களில் ஒருத்தன் ஒரு மரச் சாமான் கடையில் வேலை பார்க்கிறான். இன்னொருத்தன் ஒரு வொர்க்ஷாப்பில். ரெண்டு பேரும் காலம்பர வீட்டை விட்டுப் போனால் அப்புறம் அர்த்த ராத்திரி பார்த்துக்கொண்டால் போதும்... பிறகு வீட்டில் நிப்பது கனகமும் நகை வைக்கும் அட்டைப் பெட்டிகளை வீட்டிலிருந்து செஞ்சு விக்கும் செல்லப் பனும்தான்... நான் நேரா செல்லப்பன்கிட்டேபோய் அவன் ரெண்டு தோளையும் பிடிச்சு ஆவேசம் வந்தவளைப்போல் குலுக்கிக்கொண்டே, ‘டேய் உள்ளதைச் சொல்லு... உனக்குத் தெரிஞ்சிருக்காம இருக்க முடியாது... நீ இப்போ சொல்லாட்டி, உன் கால் மாட்டில் தலையை முட்டி நான் செத்துப் போயிடு வேன்...’

அப்படின்னு நான் அலறியதைக் கண்டு அவன் பயந்து போய், ‘எனக்கொண்ணும் தெரியாது... அண்ணிதான் என்னைக் கூப்பிட்டாள்...’ன்னு சம்மதிச்சான்.’

ஆயாவின் முகத்தில் இப்போ ஒரு உணர்ச்சி தீவிரம்... மாவிடிப் பதை நிறுத்திவிட்டு, முகத்தில் வழிந்துகொண்டிருந்த வியர்வை யைத் துடைத்துக்கொண்டாள்.

‘கடைசியில் வேணுகிட்டெ எப்படி விஷயத்தைச் சொன்னே?’

இப்போது அவள் சிரித்தாள்.

‘அவன் வந்ததும் கனகத்தை எங்கேன்னு விசாரிச்சான்... ‘பாலக் கரைக்குப் போயிருக்கா... நீ குளிச்சுச் சாப்பிடு... உடம்பெல்லாம் ரயில் கரி...’ அப்படீண்ணு நான் சொல்லும்போதே ஒரு மாதிரி பார்த்தான். அவன் குளிச்சுச் சாப்பிட்டுவிட்டு வந்து மறுபடியும், ‘கனகம் எங்கே’ன்னு கேட்டப்போ, ‘அவ பிரசவத்துக்கு அவ வீட்டுக்குப் போயிருக்கா’ என்றேன். ‘என்னா?’ன்னு கேட்டான். ‘ஆண் கொளந்தை... ஒரு மாசமிருக்கும்’ என்றேன் நான். ‘என்னம்மா... வெளையாடுறியா? அப்பா செத்தப்போ வந்த அப்புறம் நான் இப்போதானே வர்றேன்’ அப்படீன்னு அவன் அதிசயப்பட்டபோது, ‘எல்லாம் நிஜத்தைத்தான் சொல்றேன்’ என்று சொன்னதும் அவன் முகத்தைப் பார்க்க முடியலே... பேயறைஞ்சதுபோல். ‘யாரு’ன்னு கத்தினான்... ‘டேய்... இனிமே நீ கோபப்பட்டு தத்துபித்துன்னு ஏதாவது செஞ்சு விடாதே...’ அப்படின்னு அவனைப் புடிச்சு என் பக்கத்தில் உக்கார வச்சுக் கிட்டு, அந்த நாளில் அவன் அப்பா, பெரியப்பா சம்பந்தப்பட்ட பளைய கதையை எல்லாம் லேசாய்ச் சொல்லியும் சொல்லாம லும் அவனைச் சமாதானப்படுத்தத் தொடங்கினேன்.’

என்னால் ஆவலை அடக்க முடியவில்லை. ‘அதென்ன ஆயா... அந்த நாள் பழைய கதை...’ என்று நான் கேட்டபோது அவள் சிரித்துவிட்டுச் சொன்னாள்.

‘அம்மா... என்னை வேணுவின் அப்பா கல்யாணம் செய்வதுக்கு ரொம்ப நாள் முந்தியே அவர் அண்ணன் வேணுவின் பெரியப்பா வுக்குக் கல்யாணமாகிவிட்டிருந்தது. அப்போ இங்கே வீட்டின் முன்னால்தான் பட்டறை... அங்கே அண்ணனும் தம்பியும் இருந்து பொன் வேலை செஞ்சிட்டு இருப்பாங்களாம்... என் வீட்டுக்காரர் வீட்டில் இருக்கும்போது அவர் அண்ணா பட்டறை யிலிருந்து வீட்டுப் பக்கமே தலைகாட்ட மாட்டாராம்... பெரியவர் வீட்டில் இருக்கிறப்போ சின்னவர் வீட்டுக்கு வர மாட்டாங்களாம்...’ என்று சொல்லி ஆயா கண்ணை ஒரு சிமிட்டு சிமிட்டிவிட்டுச் சிரித்தபோது எனக்கு எல்லாம் புரிந்தது...

‘ஓஹோ... அப்போ இது அப்பனின் சுபாவம்தானா?’

‘அம்புடையும் கேளுங்கோ அம்மா... வேணுவுக்கு அப்பா என்னைக் கல்யாணம் செஞ்சு இங்கே கூட்டிக்கிட்டு வந்த பிறகுதான் இதெல்லாம் எனக்குத் தெரிய வந்தது. கொஞ்ச நாள் களிஞ்ச பிறகு, என் வீட்டுக்காரர் பட்டறையில் இருக்கிறப்போ, மெல்ல அவர் அண்ணா வீட்டுக்கு வருவார்... நான் மெல்ல நழுவி தெருக் கடைக்கு வந்துடுவேன்... இல்லாட்டி அடுத்த வீட்டுக்குப் போயிடுவேன்... ராத்திரி என் வீட்டுக்காரர் ‘ஏண்டி முத்தம்மா... உனக்கென்ன இவ்வளவு கொழுப்பு... அண்ணி இப்படியா எங்கிட்டெ பிகு பண்ணுறா... அவளுக்கு நானும் என் அண்ணாவும் ஒண்ணுபோல்தான். நீயும் அப்படியே...’ என்று சொன்னபோது, ‘அது உங்க அண்ணிக்குச் சம்மதமா இருக்கலாம். ஆனா... என்னைப் பொருத்தவரையில் உங்களுக்கு மட்டும்தான் நான் பெண்டாட்டி... அது உங்களுக்குச் சம்மதமில்லாட்டி என்னை என் வீட்டில் கொண்டுபோய் விட்டுடுங்கோ...’ அப்படின்னு அடிச்சுச் சொன்னேன்... அவருக்கு இன்ன மட்டுண்ணிலே கோபம்... அப்படி இருக்கையில்தான் ஒரு நாள் மத்தியானம், நான் என்னவோ நினைச்சவாறு கீழே குத்தவச்சு உட்கார்ந்துக்கிட்டு அடுப்பை ஊதிக்கிட்டிருந்தேன். திடீரென்று யாரோ என்னை மூச்சு முட்டக் கட்டிப் பிடிச்சா... இன்னாருண்ணு தெரியாமே திடுக்கிட்டு ‘ஐயோ... திருடன்... திருடன்...’ ண்ணு எட்டு வீடு கேட்கக் கத்திக்கொண்டு விழுந்தடிச்சுக்கிட்டு நான் ஓட, அடுத்த வீட்டுக்காரங்க எல்லோரும்

குண்டாந்தடியுடன் ஓடிவந்து பார்க்கும்போது... முகத்தில் அசடு வழிய நிக்கும் அவர் அண்ணாவைக்கண்டு எல்லோரும் சிரிக்கிறாங்க... அதுக்குப் பிறகு அவர் என்கிட்டே வரவே இல்லை. ஆனா... என் வீட்டுக் காரருக்கு என்மீது அசாத்திய கோபம். அந்தக் கோபத்தில் ஊரை விட்டுப் புறப்பட்டுப்போய்க் கொஞ்ச நாள் எங்கெல்லாமோ சுத்தி விட்டு வந்தாரு...' என்று ஆயா சிரித்தாள்.

'சரி... சரி... கடைசியில் உன் மகன் சமாதானப்பட்டானா?'

'சமாதானப்படாமல் வேறு வழி? செல்லப்பன்தான்னு அறிஞ்சு வேணு அவனிடம் பாய்ஞ்சப்போ நான் தடுத்தேன். 'டேய்... டேய்... சங்கதியெல்லாம் சரிதான்... நீ கொஞ்சம் ஆலோசிச்சுப் பாரு... அவன் என்ன செய்வான்? சின்னப் பையன்... உன் பெண்டாட்டியைவிட பத்து வயசுக்கு இளையவன்... ஏதோ தப்பு பண்ணிட்டான். எப்பவும் பெண்டுகள்தான் எச்சரிக்கையாக இருக்கணும்... என்னைப்பற்றிச் சொன்னேனில்லை...' அப்படிண்ணு சொன்னேன். அடுத்த வீட்டுப் பெரியவங்க வந்து 'பெண்ணடி பாவம் ஏற்கப்படாது... அவளைப் போய்க் கூட்டிக்கிட்டு வா. வேறு யாருமா? உன் கூடப் பிறந்த தம்பி தானே உள்ளது. சிறிசுகள் புத்தி இல்லாம இப்படி நடந்துக் கிட்டதுக்கு நீ உன் வாழ்க்கையையும் அவுங்க வாழ்க்கையையும் பாழாக்கி விடாதே...' என்றெல்லாம் சொல்லி அவனைச் சமாதானப்படுத்தினாங்க... கடைசியில் கனகம், பிள்ளையை எடுத்துக்கிட்டு அவள் வீட்டிலிருந்து இங்கே வந்தாள்...'

அவள் பேரக் குழந்தை இப்போ என் மூத்த மகள் கையிலிருந்து எந்தக் கவலையுமின்றி ஆ...ஊ என்று கத்தி விளையாடிக் கொண்டிருந்தான்... அவனை ஒருமுறை பார்த்துவிட்டு நான் கேட்டேன்.

'பிள்ளையை வேணு எடுப்பானா?'

ஆயா பல் முழுதும் தெரியச் சிரித்தாள்.

'அதைக் கேக்குணுமா... செல்லப்பன் வேணுவைப்போல் அல்ல, எல்லோர்கிட்டையும் கலகலப்பா பேசுவான்... அதனால் இந்தப் பயல்

செல்லப்பன்கிட்டே நல்லா ஒட்டிக்கிட்டான்... அவனைத் தூரத்தில் கண்டாலே கையை எடுத்துப் போடுவான்... இதைக் காணும்போது வேணுவுக்குப் பற்றிக்கிட்டு வரும். 'அவன் இந்தப் பிள்ளையைத் தொடக் கூடாது...' என்று வேணு சட்டம் போட்டபோது, 'டேய் சங்கதி எல்லாம் சரி. கொளந் தையும் தெய்வமும் எல்லோருக்கும் பொது! கொளந்தைங்க கிட்டே களங்கம் இல்லே... பெரியவங்க செய்கிற குற்றத்துக்கு அதுக என்ன செய்யும்?' அப்படீன்னு சொன்னேன் நான்.'

19.06.1974 - சதங்கை, தீபாவளி மலர், 11/1974

## 2. சமூக ஜீவி

மா லையில் அவன் ஆபீஸிலிருந்து வீட்டுக்கு வந்துகொண்டி ருந்தான். கை கால்கள் எல்லாம் துவண்டு போய்க்கொண்டிருந் தன. இப்போதெல்லாம் என்னவோ தெரியவில்லை, ஒரே அசதி. காலையில் ஒன்பது மணிக்கு வீட்டை விட்டு இறங்கி ஒரு மைல் தூரம் ஓட்டமும் நடையுமாய் நகர பஸ் நிலையத்துக்குச் சென்று கூட்டத்தில் முண்டியடித்துக்கொண்டு பஸ்ஸில் ஏறி நெரிசலில் வவ்வாலாய்த் தொங்கியவாறு ஆறு மைல் யாத்திரை செய்து, கீழ்ச் சிப்பந்திகள், மேலதிகாரி இவர்களின் கெடுபிடியில் அகப்பட்டு, வேலை செய்து களைத்துப் போய், மறுபடியும் பஸ்ஸைப் பிடித்துக்கொண்டு இப்படி வீடு திரும்பும்போது உடம்பில் உயிர் என்ற ஒன்று இருக்கிறதா என்றே அவனுக்குச் சந்தேகம் வந்துவிடுகிறது. இனி வீட்டுக்குள் சென்று உடையை மாற்றிவிட்டு, ஒரு அரை மணி நேரமாவது சவாசனத்தில் அப்படியே படுத்துக் கிடக்காமல் அவனால் ஒரு வார்த்தை பேசக் கூட முடிவதில்லை. அத்தனைக்கு ஒரு சோர்வு... களைப்பு...

தெரு முனை திரும்பியதும், தன் வீட்டு நடையில் ஒரு கை வண்டி (தள்ளு வண்டி) நிற்பது தென்படுகிறது. பக்கத்தில் வந்தபோது, லுங்கி உடுத்திக்கொண்டிருந்த ஒருவன் - கன்னங்கருப்பு, முகத்தில் அம்மைத் தழும்பு, தலையில் ஒரு கட்டு, மேலே சட்டை இல்லை - வண்டியைப் பிடித்துக்கொண்டு நிற்க, இன்னொருவன் - இருபது வயதிருக்கும், வெள்ளைச் சட்டை, மடக்கிக் கட்டியிருக்கும் வேஷ்டி, வெளியே உந்தி நிற்கும் பெரிய பற்கள் - மண் வெட்டியால் இவன் வீட்டு நடையில்

தெருவில் அழகாய் வளர்ந்து நிற்கும் பச்சைப் புல்லுடன் மண்ணை வெட்டி வெட்டி வண்டியில் நிரப்பிக்கொண்டிருப்பது தெரிகிறது.

சென்ற ஆண்டு... வீட்டின் முன் பள்ளமாய் இருந்ததால், மழை சமயத்தில் சேறு கெட்டி, லாரியோ, காரோ அந்த வழிப் போகும்போது வெளிக் காம்பவுண்டுச் சுவர் முழுவதும் சேற்றை வாரி அடித்து அசிங்கமாக்கிக்கொண்டிருந்தது. அதோடு தெருவில் மண்ணில் புதை போட்டிருக்கும் டிரைனேஜ் பைப் வேறு வெளியில் எழும்பித் தெரிந்துகொண்டிருந்தது. ஒரு வேளை அது உடைந்து கிடைந்து போய்விடக்கூடாதே என்றெல்லாம் எண்ணி, லாரிக்கு நூறு ரூபாய் என்பது அப்போதைய நிலைமையில் ஒரு பெரிய துகையாய் இருந்தும்கூட, நாலைந்து லாரி மண் தன் சொந்தச் செலவில் இங்கே தெருவில் இறக்க வைத்து, பள்ளத்தை, குழியை எல்லாம் மூடி, வீட்டின் முன் தெருவை சமநிரப்பாக்கியிருந்தான் இவன். மழையில் பசும்புல் வளர்ந்து அழகாய் இருந்த தெரு நடை, இப்போது அவன் மண்ணை அள்ளப் பள்ளமாகிக் கொண்டிருப் பதைக் காண இவனுக்கு பற்றிக்கொண்டு வந்தது.

நடையில் வந்து நின்றுகொண்டு, ‘எதுக்கு இப்படி மண்ணை வெட்டி எடுக்கிறே?’ குரலைச் சிறிது உயர்த்தி இவன் கேட்டான்.

வெள்ளைச் சட்டையன் தலை தூக்கி இவனைப் பார்த்துவிட்டு - அவன் பற்கள் முழுதும் வெளியே தெரிகின்றன - மீண்டும் அவன் பாட்டுக்கு மண்ணை வெட்டி எடுத்து வண்டியில் தட்டிக் கொண்டிருக்கிறான். வண்டியைப் பிடித்துக்கொண்டு நிற்பவன் மடியிலிருந்து ஒரு பீடியை எடுத்து வாயில் வைத்துக்கொண்டு அந்த வழியே என்னமோ சத்தம் போட்டுப் பேசியவாறு சென்ற ரெண்டு பேரிடம் ‘அண்ணாத்தே... தீயிருக்கா?’ என்று கேட்கிறான். அதில் ஒருவன், இவனையே பார்த்தவாறு நெருப்புப் பெட்டியை இவனிடம் கொடுக்கிறான். இவன் ஒரு தடவை, அவனைப் பார்த்துவிட்டு, மெல்ல நெருப்புப் பெட்டியை வாங்கிப் பற்ற வைத்துவிட்டுத் திருப்பிக் கொடுக்கிறான். அவர்கள்

ரெண்டு பேரும் இடையில் துண்டிக்கப்பட்ட அவர்களது பேச்சைத் தொடர்ந்து பேசியவாறு செல்கிறார்கள்.

‘ஏய்... உங்கிட்டத்தான் கேக்கிறேன். இதென்ன வேலை?’ இவன் குரலை உயர்த்தி மறுபடியும் கேட்கிறான். வெள்ளைச் சட்டையன் பல் முழுவதும் தெரிய, அசிங்கமாய்ச் சிரித்துவிட்டு, ‘இது தெரு மண்ணு... கார்ப்பரேஷன் சொத்து’ என்கிறான். வண்டியைப் பிடித்துக்கொண்டு நின்ற லுங்கிக்காரனும், வேடிக்கை பார்த்துக்கொண்டு நிற்கும் தெருச் சிறுவர்களும் என்னவோ ஒரு பெரிய ஹாஸ்யத்தைக் கேட்டுவிட்டதைப் போல் சிரிக்கிறார்கள்.

மறுபடியும் அவன் தன் வேலையில் ஈடுபடுகிறான். இரண்டு போலீஸ்காரர்கள் அவர்களையும் இவனையும் பார்த்தவாறு அந்த வழி செல்கிறார்கள்.

வீட்டு நடையில் இவன் சத்தம் கேட்டு, இப்போது, இவன் மனைவி ராதா, குழந்தைகள் எல்லோரும் வெளியே வருகிறார் கள்.

வண்டி நிறைந்த பிறகு லுங்கிக்காரன் இழுக்க, வெள்ளைச் சட்டையன் தள்ள, வண்டி செல்வதைப் பார்த்துவிட்டு இவன் உள்ளே வந்து உடை மாற்றிவிட்டுக் கட்டிலில் படுக்கிறான்.

களைப்பில் சோர்ந்து துவண்டுபோய்க்கொண்டிருக்கும் உடம்பு... மனசில் சொல்லத் தெரியாத எரிச்சல்.

‘டிபன் சாப்பிட்டுவிட்டு வந்து படுங்களேன்...’ ராதா வந்து அழைக்கிறாள். ‘நீ பார்த்துக்கிட்டுப் பேசாமல் இருந்தி யாக்கும்...’ இவன் எரிந்து விழுகிறான்.

‘நான் பார்க்கவே இல்லை... பார்த்திருந்தாலும் நீங்க சொல்லும் போதே கேக்காதவன் நான் சொன்னாக் கேக்கவா போறான்?’

இவன் எழுந்து வீட்டின் பின்பக்கம் பாத்ரூமுக்குச் சென்று கை கால் முகம் அலம்பிவிட்டு, இறங்கும்போது விழிகள் வழக்கம்போல் மேலே செல்ல, திறந்துக் கிடக்கும் ஜன்னல்... ஜன்னலின் மறு பக்கம் இரண்டு தலைகள்... மனசில் சொரு சொருவென்று ஆத்திரம்... அந்தக் கள்ளச்

சாமியாரைச் செருப்பைக் கழற்றி அடிக்கணும் என்று மனசுக்குள் பொருமிக் கொண்டே, கொல்லையில் கொடியில் காற்றில் படபடத்துக் கொண்டு கிடந்த துண்டை எடுத்து முகத்தையும் கை கால்களையும் அழுத்தித் துடைக்கத் தொடங்கினான்.

மூணு நாலு மாசம் முன்...

இவன் வீட்டின் வலப் பக்கம் தொட்டு அடுத்த பெரிய பங்களாவைத் திடீரென்று புதுப்பிக்கும் மராமத்து வேலையெல்லாம் அமர்க்களமாய் நடைபெறுவதைக் கண்டு எதிரில் இருந்த பெட்டிக் கடை ஆறுமுகத்திடம் விசாரித்தபோது, ‘சார்... அந்தப் பங்களாவை ஒரு லட்சம் ரூபாய்க்கு என்.வி.ஈ. சாமியார் வாங்கியிருக்கிறார்’ என்றான்.

‘ஒரு லட்சம் ரூபாய்க்கா?’ என்று கேட்கும்போதே எப்போதும் சட்டை இல்லாத உடம்பில் இடுப்பில் காஷாய வேஷ்டி, பெரிய கன்னங்கரிய தாடி மீசை, கூலிங் கிளாஸ், தோல் பை, மிதியடி, பியட் கார் இத்தகைய சின்னங்களுடன் அடிக்கடி வழிகளில் எதிர்ப்படும் அந்தச் சாமியாரை இவனுக்கு ஞாபகம் வந்தது.

‘அவருக்கென்ன சார்... கள்ளப் பணம்... காஷாய வேஷம் எல்லாம் வெளியேதான் சார்... மற்றபடி... ஒன்றும் சொல்ல வேண்டாம்... பத்திருபது வருஷத்துக்கு முந்தி பட்டாளத்துக்குப் போயிட்டு வந்தவராம்... பக்கத்து வெளியூரில் எல்லோர் கிட்டையும் நிலம் புலன்களுக்காகச் சண்டை சச்சரவுதான் சார்... கோர்ட்டில் எத்தனையோ வழக்குகள் நடக்குதாம்... அதோடு ரெண்டோ மூணோ பெண்டாட்டி... இந்தப் பங்களாவைப் புதுப்பித்து ஆயிரம் ரூபாய் வாடகைக்கு ஏதோ ஆபீஸுக்கு விடப் போகிறாராம்...’

இதன்பின் அந்த மூன்று மாடிக் கட்டிடத்தில் மூன்றாம் மாடிக் கூரையில் பழைய ஓடுகள் மாற்றப்பட்டுப் புதிய ஓடுகள் பரப்பப்பட்டன... புதிய பிரம்மாண்டமான தடி உத்திரங்கள் மாட்டப்பட்டன. அப்போதெல்லாம், ஓட்டுத் துண்டுகள், பெயர்ந்த காரை, தடிச் சிதில்கள் எல்லாம் இவன் வீட்டுக் கொல்லையில் சடசடவென்று விழத் தொடங்கின. ஒருநாள் மாலையில் ஆபீஸிலிருந்து வந்து வீட்டு மாடிக்கு இவன் போனபோது,

மாடி வராந்தாவில் வழக்கத்துக்கு விரோதமாய் ஒரு இருட்டு. சுற்றுமுற்றும் பார்த்தபோதுதான் புரிந்தது, காற்று வெளிச்சம் வர அந்த மாடி வராந்தா சுவரின் மேலே இருந்த சின்ன இரண்டு வென்டிலேட்டர்களை அடைத்துக்கொண்டு மறு பக்கம் ஒரு செங்கல் சுவர் எழுப்பப்பட்டிருப்பது. கம்பிகளின் இடைவழி தெரிகிறது. மனசுக்குள் ஒரு ஆத்திரம் தோன்றியது. ஆனாலும், சாமியாரிடம்போய் எப்படி முறையிட முடியும். அவர் வீட்டின் ஸீக்ரஸிக்கு அந்த வென்டிலேட்டர்கள் தடையாக இருக்கிறது என்று அவர் காரணம் சொன்னால் அதை மறுத்துத் தன்னால் என்ன சொல்ல முடியும்? எனவே அவன் உள்ளுக்குள் பொருமிக்கொண்டு பேசாமல் இருந்து விட்டான். இரண்டு நாட்கள் கழித்து அவன் ஆபீஸிலிருந்து வீட்டில் வந்து ஏறும் போது ராதா வந்து, 'பார்த்தேளா சாமியார் செய்திருக்கும் காரியத்தை' என்று இவனைக் கூட்டிக்கொண்டு போய்க் காட்டினாள். இவன் வீட்டுக் கொல்லையில், பாத்ரூம் நடையில், நேர் இரண்டு வீட்டுக்கும் பொதுவாக இருந்த சுவரில் மேலே மாடியில் இடித்து சாமியார் ஒரு ஜன்னல் போட்டிருப்பதைப் பார்த்தான்.

'இது எப்போ.'

'நீங்க ஆபீஸுக்குப் போனபிறகு நாலைஞ்சு பேருங்க மேற்பார்வையில் அவசர அவசரமாய்ச் செஞ்ச கைங்கரியம்.'

'நீ பார்த்துக்கிட்டு சும்மாவா இருந்தே?'

'சொன்னாக் கேட்டாத்தானே... அவுங்க நாலைஞ்சு ஆம்புளை கள் நின்னு இப்படிச் செய்யும்போது, பொம்பளை நான் என்ன செய்வேன்?'

இவனுக்கு ஆத்திரம் சகிக்க முடியவில்லை. ஆபீஸிலிருந்து வந்த டிரஸைக்கூட மாற்ற நிற்காமல், வந்த காலுடன் அடுத்த வீட்டுக்கு விரைந்தான். இவனைக் கண்டதும் தாடி மீசையின் இடையில் பல் முழுவதும் தெரியச் சிரித்தவாறு, 'அடேடே... நீங்களா... வரணும்... வரணும்... என்ன சார் விசேஷம்?' என்று சாமியார் அமர்க்களமாய் வரவேற்றபோது இவன் வந்த வேகம் குறைந்து விட்டது.

‘இல்லே… நீங்கள் இப்படிப் பொதுச் சுவரில் என் வீட்டு பாத்ரூமைப் பார்த்து இப்படி ஒரு ஜன்னல் போட்டிருப்பது முறையா? பொம்பளைங்களுக்கு வீட்டுக்குப் பின்னாலே நடமாட வேண்டாமா?’

‘ஓ… அதைச் சொல்றேளா…’ என்று அவர் இழுத்தபோது, ‘எங்க போர்ஷனில் முன்னாலேயே இருந்த வென்டிலேட்டரை மறைச்சு நீங்க சுவர் கட்டியபோது நான் வந்து கேட்கவில்லை… இப்போ நீங்க மட்டும் பொதுச் சுவரில் இப்படிப் புதுசா ஜன்னல் போடுவது சரியா?’ அவர் இப்போது சிரிக்கிறார்… ‘ஆமா சார்… இந்தக் காலத்தில் இதெல்லாம் பெரிய ஒரு தொந்தரவுதான் சார். அந்தக் கொத்தனாரிடம் நான் படிச்சுப் படிச்சுச் சொன்னேன்; வேண்டாம், வேண்டாமுண்ணு! ஆனா, அவன் கேட்டாத் தானே… நேரே இந்தத் தெரு முனையில் இங்கே பார்த்திருக்கும் அம்பாள் கோயில் வாசலை அடைத்து இங்கே சுவர் இருப்பது தோஷம் அப்படிண்ணு சொல்லி இதைச் செஞ்சுட்டான். இப்போ அதுக்கென்ன… உங்களுக்கு இஷ்டமில்லாட்டி, இப்போ அதை மாற்றி விட்டு சுவர் கட்டி விடலாம். ஆனால், அந்த ஜன்னல் அங்கே இருந்தாலும் உங்களுக்கு ஒரு கஷ்டமும் வராம நான் பார்த்துக்குறேன்…’

‘அதெப்படி…? நீங்கள் ஏதோ ஆபீஸுக்கல்லவா வாடகைக்கு விடப் போறேள்… ஆபீஸுன்னா பல பேருங்க வருவாங்க… போவாங்க….’

‘என்ன சார், நான் அவ்வளவு தூரம் விவரம் இல்லாதவனா? எனக்குத் தெரியாதா இடைஞ்சலா இருக்குமுண்ணு! அதனாலே தான் எப்போதும் அந்த ஜன்னலை அடைச்சுப் போடும்படி வச்சிருக்கேன். நீங்க கவனிச்சேளா சார். அந்த ஜன்னலின் கதவுகளும் போல்ட்டும்கூட உங்க பக்கம்தான் போட்டிருக் கேன்… எதுக்குத் தெரியுமா? அந்தப் பக்கம் ஏணி வச்சு ஏறி ஜன்னல் கதவுகளை அடைச்சு போல்ட்டையும் போட்டு விட்டால், பிறகு இங்கே இருந்து யாராலையும் அதைத் திறக்க முடியாது… எப்படி நம்ம யோசனை?’ என்று கூறிவிட்டு சத்தம் போட்டு அவர் சிரித்தபோது, கூடச் சிரிப்பதுபோல் காட்டவேண்டியது தன் கடமை என்று இவனுக்குத் தோன்றியது. பிறகு, இவனை அவர் பேசவே

விடாமல் வீட்டுக்கு அனுப்பி வைத்தார். ஆனால், இந்த மூன்று மாச காலமாக ராத்திரி பகல் ஒருநாள்கூட இந்த ஜன்னல் அடைத்துக் கிடந்து காணும் பாக்கியம் இவனுக்குக் கிட்டவில்லை. பாத்ரூம் பக்கம் வரும்போதெல்லாம் மலக்கத் திறந்து கிடக்கும் அந்த ஜன்னலைப் பார்த்து இப்போதுபோல் உள்ளுக்குள் பொருமிக் கொள்கிறான்... ஓரிரு தடவை வழியில் சாமியைப் பார்த்த போது, அவர் ஈ என்று பல்லைக் காட்டுவதைப் பாராட்டாமல், காரசாரமாய் ரெண்டு வார்த்தை அவரிடம் கேட்க அவர் பக்கத்தில் ஓடிச் சென்றும், சகிக்க முடியாத ஆத்திரத்தால் வார்த்தைகள் ஒன்றும் வாயிலிருந்து வெளியே வராமல், ‘நீங்க செய்வது சரியா?’ என்று மட்டும் கேட்டு ஒரு உறுமல் உறுமிவிட்டுத் திரும்பி நடக்கத்தான் தன்னால் முடிந்திருக்கிறது...

கோர்ட்டில் ஒரு கேஸ் தாக்கல் செய்தால் என்ன என்று இவன் நண்பன் அட்வகேட் சுந்தரவதனனிடம் இது பற்றி விசாரித்த போது, ‘நீ ரொம்ப ஆர்த்தடாக்ஸா இருக்கிறே... இந்தக் காலத் தில் இதெல்லாம் சகஜம்... யூரோப்பியன் லாவில் இதுக்கெல் லாம் ஷரத்துக்கள் இருக்கும். நாம் இந்தியர்கள். சாதாரணமா இதுக்கெல்லாம் அப்படி அலட்டிக் கொள்வதில்லை...’ என்று சொல்லி இவனைப் பின்வாங்க வைத்துவிட்டான்.

‘என்னா அங்கேயே நின்னுட்டீங்க... டிபன் ஆறிப் போகுது’ என்று ராதா கூப்பிட்டதும் இவன் சமையல் அறைக்கு வந்தான்.

தட்டில் ஆவி பறக்கும் உப்புமா... ஸ்பூனில் எடுத்து வாயில் போட்டிருக்க மாட்டான். வீசிய காற்றில் குப்பென்று அந்த வாடை தொண்டைக்குள் அடைத்துக்கொண்டதைப்போல் அவனுக்குக் குமட்டல் எடுத்தது...

‘உம், உம்... போதும்... காப்பியை எடு’ என்றுவிட்டு எழுந்து கையை அலம்பினான். ராதாவும் மூக்கில்லாதவள் அல்லவே. அவளையும் அந்த நாற்றம் போய்ச் சேர்ந்திருக்காமல் இருக்க முடியாது. ஆனால், அவள் ஒன்றும் சொல்லவில்லை. இதுபற்றி அவளிடம் இவனாக வாய் திறந்தால், கடைசியில் ஒரு சண்டையில் போய்த்தான் அது முடியும் என்பது இவனுக்குச் சரிவரத் தெரியுமாதலால், காப்பியைக் குடித்தது

பாதி, குடிக்காதது பாதி, தம்ளரை அவள் கையில் கொடுத்துவிட்டு அவன் சமையலறையை விட்டு வெளியேறினான்.

இவன் வீட்டின் இடப் பக்கம் தொட்டுக் கிடக்கும் முப்பது சென்ட் தென்னந்தோப்பு ராதாவின் தங்கச்சியுடையது. அவள் மாப்பிள்ளை வீடு அடுத்த தெருவில் இருந்தது. இப்படித்தான் ஒரு நாள் இவன் ஆபீஸிலிருந்து வீட்டுக்குள் ஏறவில்லை. திப்பென்று குடலைப் புரட்டுவதுபோல் ஒரு நாற்றம். தோப்பை எட்டிப் பார்த்தபோது, ராதாவின் தங்கச்சி புருஷன் சேதுராமனும், சேதுராமனின் அப்பா குப்புஸ்வாமியும் மேற்பார்வையிட, வண்டி வண்டியாய், எங்கோ கிடந்து புழுத்த ஹோட்டல் எச்சில் இலைகள், குப்பை கூளங்களை எல்லாம் தென்னம்பிள்ளைகளின் அடியில் இறக்கிக்கொண்டிருக்கிறார்கள். வீட்டுக்குள்ளே வந்த போதும், மலினப்படுத்தப்பட்ட அந்தக் காற்றின் அசுத்த விஷ வாடை... 'இங்கே அவுங்க தென்னம்பிள்ளைகளை நட்டு எத்தனையோ வருஷமாச்சு... நாம் இப்போ இங்கே இந்த வீட்டில் குடி வந்தபிறகுதானே இவுங்களுக்கு இப்படி ஒரு நீச புத்தி போச்சு. இங்கே நாமோ பிள்ளை குட்டிகளோடு வசிக்கிறோம்... இப்படி ஏர் பொலுஷன் ஆக்கி பிள்ளைகளுக் கும் நமக்கும் ஏதாவது சீக்கு வரட்டுமுண்ணுதானே? அவன் வீட்டு முற்றத்தில் நிக்கும் தென்னம்பிள்ளைகளுக்கு இந்த அழுகிப் புழுத்த எச்சிலைக் குப்பைக் கூளங்களைப் போடுவானா? இதுக்கெல்லாம் இவன் ஒரு டாக்குட்டராம். டாக்குட்டர்...' என்று ராதாவிடம் சத்தம் போடத்தான் இவனால் முடிந்தது. இந்த மணத்தை ஏற்றவாறு இங்கே வந்த மாமனாரி டம் சொன்னபோது, 'நான் சொல்லுகிறேன்' என்று சொல்லிவிட்டுப் போனவர், பிறகு இந்தப் பக்கமே வரவில்லை. ஓரிரு முறை நேரில் இதைப்பற்றி அவர்களிடமே கேட்க நினைத்தபோது அவர்கள் தோப்பு தென்னைகளுக்கு உரம் போடுவதில் தனக்குப் பொறாமை என்று அர்த்தப்படுத்தி விட்டால்... என்று ஒரு சங்கடம். தோப்பில் சேதுராமனின் அப்பா தலை தென்படும்போதெல்லாம் குப்பைஸ்வாமி என்று ராதாவிடம் உச்சரித்துக் கலி தீர்த்துக்கொண்டிருக்கிறான் இவன்.

கட்டிலில் கிடந்த அவன் மறுபடியும் வெளியில் என்னவோ சத்தம் கேட்டு எழுந்துபோய்ப் பார்த்தபோது மீண்டும் அந்த லுங்கிக்காரன் வண்டியைப்

பிடித்துக்கொண்டு நிற்க, வெள்ளைச் சட்டையன் மண் வெட்டியால் வீட்டு நடையிலிருந்து மண்ணை வெட்டி வண்டிக்குப் போட்டுக்கொண்டிருக்கிறான். இவனுக்கு ஆத்திரம் அணை உடைத்துக்கொண்டு குபீரென்று பாய்ந்தது. ஓடித் தெரு நடைக்கு வந்தான். 'ஏய்... உங்ககிட்டே எத்தனை வாட்டிச் சொல்லணும்? இப்ப வீட்டு நடையிலிருந்து மண்ணை முழுதும் வாரிக் கொண்டு போய்க்கிட்டிருக்கே...'

வெள்ளைச் சட்டையன் பல் முழுதும் வெளியில் தெரிய பதில் சொன்னான்: 'வீட்டுக்குள்ளே இருந்து வாரல்லையே. இது கார்ப்பரேஷன் ரோடு...'

'உன் வீட்டு நடையிலும் கார்ப்பரேஷன் ரோடு இருக்குமே. அங்கே போய் வாரு... இது நான் காசு கொடுத்து வாங்கிப் போட்ட மண்ணு...'

'இப்போ காசு வேணுமா?'

'காசும் வேண்டாம்... ஒண்ணும் வேண்டாம்... பேசாம போயிட்டாப் போதும்...'

'போடா... அப்படித்தான் வாருவேன்...' அதன்கூடச் சில கெட்ட வார்த்தைகள்...

தெருவழிப் போகிறவர்கள், வருகிறவர்கள், தெருவாசிகள் சிலர் கூட்டமாய்க் கூடி நின்று வேடிக்கை பார்க்கிறார்கள். கூடி நிற்கும் தெருப் பையன்களுக்கு ஒரே குஷி... இவன் பார்த்துக்கொண்டு நிற்கையில் வெள்ளைச் சட்டையன் ஈண்ணு பல்லை இவனை நோக்கிக் காட்டியவாறு, மண்ணை மண் வெட்டியால் வாரி வண்டியில் நிரப்பிக்கொண்டிருக்கிறான். வண்டி நிரம்பியதும், லுங்கிக்காரன் இழுக்க, வெள்ளைச் சட்டையன் பின்னாலிருந்து தள்ள, வண்டி நகரவில்லை. இவனையும் அவர்களையும் மாறி மாறி பார்த்துச் சிரித்து மகிழ்ந்துகொண்டிருந்த தெருப் பையன்கள் வண்டிச் சக்கரங்களைத் தள்ளி உதவ, வண்டி முன்னால் இவனைக் கடந்து செல்லும்போது, ஒரு வெற்றிப் பெருமிதத்துடன் இவனைத் திரும்பிப் பார்த்துவிட்டு, 'அவன்

முறைக்கிறான், பார்க்கலையா?' என்று சொல்லிச் சிரிக்கிறான் வெள்ளைச் சட்டையன். 'உன்னைப் போல் எத்தனை பேரையோ பார்த்திருக்கேண்டா... இப்போ வாரிக்கிட்டுப் போவதைப் போல் இந்த மண்ணை உன்னைக்கொண்டே இங்கே திரும்பக் கொண்டுவந்து தட்ட வைப்பேன் பாரு...' என்று தெரு நடையில் நின்றுகொண்டு இவன் சத்தம் போட்டபோது, 'போடா...' வுடன் கனமான ரெண்டு கெட்ட வார்த்தைகளைக் கூடச் சொல்லி அவன் வண்டியைத் தள்ளிக்கொண்டு செல்கிறான்.

25.06.1974 - சதங்கை, ஏப்ரல் 1975

## 3. அபஸ்வரங்கள்

ப ருத்த உடம்பை வைத்துக்கொண்டு மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க அலமேலு மாடிப்படிகளில் இறங்கி வருவதற்குள் இரண்டு மூன்றுமுறை அழைப்பு மணி வீறிட்டு விட்டது. கீழே ஹாலில் வந்து பீப்பிங் துவாரம் வழியாகப் பார்த்தபோது வேலைக்காரி வீரம்மா வந்து சொன்னது முழுக்க முழுக்க நிஜம்தான் என்று புலப்பட்டது.

வெளிக் கேட்டைத் திறந்துகொண்டு ஸிட் அவுட் ஸெட்டியில் யாரோ ஒரு முரடன் வந்து உரிமையோடு உட்கார்ந்திருக்கிறான். முகத்தில் தாடி மீசை. கையில் ஒரு கத்தி...

இவளுக்குத் திக்கென்றது. ஜன்னலின் ஒரு கதவை மட்டும் லேசாய்த் திறந்து 'யாரு?' என்று இவள் கேட்டபோது சப்தம் எங்கிருந்து வருகிறது என்று அறியாமல் அவன் அங்குமிங்கும் முகம் திரும்பிப் பார்ப்பது தெரிகிறது. கடைசியில் இவளைக் கண்டுகொண்டு எழுந்து ஜன்னல் அருகில் வருகிறான்.

'அண்ணா இல்லையா?'

இவள் புரியாமல் விழிப்பதைப் பார்த்து, 'அதுதான் ராமசாமி அண்ணா இல்லியா?' என்று மிகவும் சகஜ பாவத்தோடு அவன் வினவினான்.

'இல்லை... டூர் போயிருக்கார்... நீங்கள்....'

'என்னைத் தெரியல்லியா? சொல்றேன். சித்தெ கதவைத் திறங்கோ...'

இவள் தயங்குவதைக் கண்ணுற்று, 'என்ன பயமா இருக்கா? தைரியமாகக் கதவைத் திறக்கலாம்... நானும் உங்களவாதான்... அசல்

வடமா கோத்திரம்...' என்று சொல்லிச் சிரித்தவாறு சட்டைக்குள் கையை விட்டு அழுக்கடைந்து சாக்கு நூலைப் போல் இருந்த பூணூலை வெளியே இழுத்துக் காட்டினான்.

இப்போது இவளுக்கு ஒரு தைரியம் வந்தது. கண்ணில் இருந்த கண்ணாடியைச் சரி செய்துகொண்டே, பின்னால் பீதியோடு நிற்கும் வீரம்மாவிடம், 'கதவைத் திற... ஆனால், அவன் போவது வரைக்கும் நீ என் பக்கத்திலேயே நிற்கணும்' என்று ரகசியமாய்க் கட்டளையிட, 'ஆகட்டும்' என்று தலையாட்டி விட்டு அவள் பிளஷ்டோரைத் திறந்தாள். மத்தியான வெயிலின் ஒளி ஹாலுக்குள் ஓடி வந்து நிரம்பியது.

எப்போது வேண்டுமானாலும் பின் வாங்கிக்கொள்ளும் வசதியில் முன்னெச்சரிக்கையாய் வாசலில் நின்றுகொண்டு, 'புரியலையே...' என்று அவனைக் கூர்ந்து நோக்கியபடிச் சொன்னபோது, அவன் கடகடவென்று சிரித்தான். தேங்காய் மூடியைச் சிமெண்டு தரையில் தேய்ப்பதுபோல் ஒலித்த அந்தச் சிரிப்பில் ஊடாடி யிருந்த இன்னதென்று தெரியாத ஏதோ ஒரு த்வனி இவளை மேலும் பயமுறுத்தியது.

'தெரியல்லியா? பாலக்காட்டில் திவான் பேஷ்காரா இருந்த பிச்சு ஐயரைத் தெரியாதா?'

'கேள்விப்பட்டிருக்கிறேன்...'

'அவரோட ரெண்டாவது பையன்தான் நான்... பெயர் சேஷன்...'

'ஓகோ... அப்படியா... உட்காருங்கோ' சற்று முன்வரை யாரும் சொல்லாமலேயே உட்கார்ந்திருந்த அதே ஸெட்டியில்போய் அவன் உட்கார்ந்து கொண்டான்.

அவன் கையில் இருந்த கத்தியிலேயே இவள் விழிகள் இருப்ப தைக் கண்டு, 'ஓஹோ... இந்தக் கத்தியைப் பார்க்கிறேளா! சொல்றேன். முதலில் எனக்குக் கொஞ்சம் தீர்த்தம் கொண்டுவரச் சொல்லுங்கோ. தொண்டை என்னமா வறளுது...' என்றான், இவள் தோளின் வழியாக வீரம்மாமீது பார்வையைச் செலுத்தி யவாறு.

வீரம்மா இவளைப் பார்த்தாள். எங்கே அவள் தன்னை இங்கே இவனிடம் தனிமையில் விட்டுவிட்டு உள்ளே போய் விடுவாளோ என்று இவளுக்குப் பயமாய்ப் போய்விட்டது.

'அதுக்கென்ன... கொண்டு வரேனே' என்று அவசரப்பட்டுக் கொண்டு சொல்லிவிட்டு, திரும்பி வீரம்மாவிடம் அங்கேயே நிற்குமாறு சைகை காட்டி, இவள் உள்ளே விரைந்து சென்றாள். ஃபிரிட்ஜைத் திறந்து லெமன் ஜூஸை எடுத்துக்கொண்டு டீபாயில் வைத்ததும் தம்ளரைக் கையில் எடுத்து, ஸ்டாராவைத் தூக்கிக் கீழே போட்டுவிட்டு, மடமடவென்று ஒரே மூச்சில் அவன் குடித்தான். பிறகு, தம்ளரைக் கீழே வைத்துவிட்டு, 'ராமையரை உங்களுக்குத் தெரியாதா?' என்று கேட்டான்.

'எந்த ராமையர்?'

'அதுதான் உங்க ஆத்துக்காரர் ராமசாமியண்ணா ஆபீஸ் சூப்பிரண் டன்ட்...'

'ஓகோ... அவரா... மதுரையிலிருந்து பெண் எடுத்திருக்கிறாரே...' என்று இவள் இழுத்தபோது, 'ஆமாமா சாட்சாத் அவனேதான்... அவன் ஆத்துக்காரியின் கூடப் பிறந்த தங்கையைத்தான் நானும் கட்டியிருக்கிறேன். முறைக்கு அவன் என் ஷட்டகர்...' என்றான் அவன்.

'என்ன...?'

'ஆமா... ஆனா... இப்போ அவள் என்கூட இல்லை. இந்த ராமையரும் இன்னும் ஏழெட்டுப் பிராமண ரவுடிகளுமா என் ஆத்துக்கு வந்து, வயிறும் பிள்ளையுமா இருந்த என் ராஜியைத் தூக்கிக் காரில் போட்டுக் கடத்திக்கிட்டு போயிட்டாங்க...'

'அட ராமா...'

'ஆமா... இப்போ சண்டாளங்க அவளை எங்கேயோ ஒளிச்சு வச்சிருக்காங்க.'

'என் பிள்ளையையும், பெண்ணையும்கூட என் கண்ணில் காட்டுவதில்லை... அதுதான் நான் இப்படிக் கத்தியும் கையுமா

நடந்துண்டிருக்கேன்... வாகா, வசதியா என் கையில் சிக்கட்டும். அந்த ராமையரின் கழுத்தைச் சீவிப் போடுவேன் சீவி.'

அவன் முகத்தில் விழிகளில் எரிந்த வெறியும், கையிலிருந்து ஆடிய கத்தியும் இவளைத் திகிலடைய வைத்தன.

'சே... சே... அதெல்லாம் மகா பாபமல்லவா... பிரம்மஹத்தி... ராமையருக்கும் பிள்ளை குட்டிகள் இல்லையா? கல்யாண பிராயத்தில்கூட ஒரு பெண் இருக்கிறாளே...'

'பிறகென்னவாம்! அவனுக மட்டும் இப்படியெல்லாம் நடந்துக்கலாமா? நீங்க பெரியவங்களா இது சம்பந்தமாகப் பேசி, மரியாதைக்கு என் ஆத்துக்காரியை எங்கிட்டே கொண்டு விட ஏற்பாடு பண்ணினா நான் ஏத்துக்குறேன்... ஆமா...'

'சரி... சரி... எதுக்கும் அவர் ஊரில் இல்லை... வரட்டும் ராமையர் கிட்டெ இது சம்பந்தமா பேசிப் பார்க்கிறோம்...'

அவன் மேலும் என்னவெல்லாமோ வளவளவென்று பேசத் தொடங்கினான். அவனை எப்படிப் போகச்செய்வது என்று யோசித்துக் கொண்டிருந்தாள் இவள்.

திடீரென்று 'மணி என்னாச்சு?' என்று கேட்டான் அவன்.

சுவர் கடிகாரத்தை எட்டிப் பார்த்துவிட்டு 'மூணரையாச்சு...' என்றாள் இவள்.

'பார்த்தேளா... உங்ககிட்டெ பேசிக்கிட்டு இருந்ததில் சாப்பாடு கூட மறந்து போச்சு... இனி லாட்ஜில் சாப்பாடு வச்சிருக்கி றானோ, என்னமோ...' என்று அவன் மெல்ல இழுத்தபோது, இவளுக்கு என்னவோ மாதிரி இருந்தது. இவள் வீரம்மாவைப் பார்த்தாள்.

'சாதமெல்லாம் ஆறிக் குளிர்ந்து போயிருக்கும்...' என்று அவள் அலமேலு மட்டும் கேட்கச் சொன்னதற்கு 'அதுக்கென்ன என் வாழ்க்கையே இப்படி சூடு சொரணை இல்லாமல் ஆயாச்சு...' என்றவாறு எழுந்தான் சேஷன்.

உள்ளே அவனைக் கூப்பிடவும் அச்சமாக இருந்தது. ஆனால், அவன் எந்தத் தயக்கமும் இன்றி 'பாத்ரூம் எங்கே இருக்கு? கை காலை அலம்பிக்கிறேன்...' என்றபோது வேறு வழியில்லாமல், பாத்ரூமைக் காட்ட வேண்டிவந்தது. அவன் உரிமையாடு உள்ளே நுழைந்தான்.

ஒரு விதத்தில் அவனுக்குச் சாப்பாடு போட்டு வெளியில் போகச் செய்து, கதவைச் சாத்தித் தாழைப் போட்டு விட்டு, முதல் வேலையாக இவள் டெலிபோனில் ராமையரைக் கூப்பிட்டு, சேஷன் வந்திருந்த விவரத்தைத் தெரிவித்தாள்.

'அடப்பாவி... அங்கேயும் வந்துட்டானா? அவனுக்கு இதே வேலையாப் போயிட்டுது... உங்க ஆத்துக்காரருக்கு எல்லாம் தெரியும். நான் சொல்லியிருக்கிறேன்...'

'கையில் கத்தி வேறு வச்சிண்டிருக்கிறானே...'

போனில் இப்போது சிரிப்பொலி...

'ஆமா... என்னைக் குத்தப் போறானாம்... நேற்றைக்குக் காலம்பர என் அகத்தில் வந்து, 'என் ஆத்துக்காரியைத் திரும்பத் தர்றியா, குத்திக் குடலை எடுக்கட்டுமா'ன்னு சத்தம் போட்டான். அவனோட ஆத்துக்காரி என் பையிலா இருக்கிறாள்; இவன் கேட்டவுடன் எடுத்துக் கொடுக்க! கொஞ்ச நேரம் சகித்துப் பார்த்தேன். அவன் போகிற லட்சணம் இல்லை... வழக்கம் போல் கன்னத்தில் ரெண்டு கொடுத்த பிறகு பேசாமல் போனான். அவன் வியாதிக்கு இதுதானே மருந்து.'

'என்னா...?'

'ஆமா இப்போ புரிஞ்சிருக்குமே... அவனுக்கு மூளை சரியில்லே...'

'அப்படீன்னா மெண்டல் ஹாஸ்பிடலில் அட்மிட் பண்ணாமல் அவனை எதுக்கு இப்படித் திறந்து விட்டிருக்கிறாங்க?'

'அங்கேதான் கிடந்தான். எவ்வளவு நாளாகத்தான் அங்கே வச்சிண்டிருப்பாங்க? இது 'ஹோப்லஸ் கேஸு'ன்னு டாக்டர்கள்

எல்லோரும் கை விட்டுட்டாங்க... அடிக்கடி இப்படி வெளியில் வரும்போது எல்லோருக்கும் பெரிய உபத்திரவமா இருக்கு.'

'கல்யாணத்துக்கு முன்னமே இப்படித்தானா?'

'ஆமாம். சின்ன வயசிலிருந்தே அவனுக்கு இந்தக் கோளாறு உண்டாம்.'

'பிறகெப்படி இவனை மாப்பிள்ளையாக்கினீங்க?'

'உம்... அதொண்ணும் சொல்ல வேண்டாம். பெரிய கதை... நம்ம தலை விதின்னுதான் சொல்லணும்... அவன் அண்ணா சாமிநாதன் என் கிளாஸ்மேட், எர்ணாகுளத்தில் வேலையா இருக்கிறப்போ அவன் திடீரென்று ஒருநாள் வந்து இது பற்றிப் பேசினான்...'

'டேய்... உன் ஆத்துக்காரியின் தங்கையை என் தம்பிக்குப் பார்ப்போமா?'... அப்டின்னு கேட்டான். பையன் கிராஜுவேட், பி.டபிள்யு.டி.யில் நல்ல வேலை. இவ்வளவுதான் தெரியும். இப்படிச் சிநேகத் துரோகம் செய்வான்னு எனக்கு எப்படித் தெரியும்? மேற்கொண்டு யாரிடமும் ஆலோசிக்கவில்லை. என் மாமியாருக்கு - மாமனார் தவறிப் போனார். மதுரைக்குக் கடிதம் எழுதினேன்... மளமளவென்று காரியங்கள் நடந்தன. கல்யாணம் முடிஞ்சுட்டது.'

'இவன் இப்படீன்னு எப்படித் தெரிஞ்சுது?'

'சேஷனுக்கு அப்போ கோழிகோட்டில் வேலை. புருஷனும் பெண்டாட்டியும் அங்கே புதுக் குடித்தனம் போட்டு நாலாம் மாசத்தில் மதுரையில் என் மாமியாரிடமிருந்து எனக்கு லெட்டர் வந்தது... 'ராஜியை புருஷன் ரொம்ப கஷ்டப்படுத்துகிறானாம்... அதோடு இப்போ முழுகாமல் வேறு இருக்கிறாளாம். அவா அடுத்தாத்து ரெஜிஸ்ட்ரார் பகவதீஸ்வரய்யர் ஆத்துக்காரி லக்ஷ்மி மாமாகிட்டே இருந்து கடிதம் வந்திருக்குது; போய் விசாரிக் கணும்' அப்படின்னு. நான் கோழிக்கோட்டுக்குப் போவதற் கிடை யில் அவன் ராஜியை எங்கோ கடத்தி விட்டான். என்னைக் கண்டதும் தாறுமாறாத் திட்டினான். 'அவ என் பெண்டாட்டி... நீ யாரு...? உனக்கும் அவளுக்கும்...?' அப்படி இப்படின்னு அசிங்கமா எல்லாம்

பேத்தத் தொடங்கிட்டான். அக்கம் பக்கத்தில் விசாரிச்சதில் கேள்விப்பட்டது நிஜம்தான்னு தெரிஞ்சுது.'

'என்ன காரணமாம்?'

'இந்த மாதிரி மூளைக் கோளாறு உள்ளவங்களுக்கு இதுக்குன்னு தனியா காரணம் வேறு ஏதாவது வேணுமா? வீட்டில் புருஷனைத் தேடி ஏதாவது ஆண் பிள்ளைகள் வந்தால் அவுங்ககிட்டெ பேசினால் சந்தேகம்... துணி வெளுக்கிற டோபிகிட்டே பேசினா அதுவும் சந்தேகம். ஏதாவது ஆண் பிள்ளைகள் போகிற திசையில் திரும்பிப் பார்த்தால், அவனை நேரமே தெரியுமான்னு அடி உதை...'

'ராஜியை எங்கே கடத்தியிருந்தானாம்?'

'எங்கெல்லாமோ கூட்டிக்கிட்டுப் போயிருக்கிறான். கடைசி யில், பாலக்காட்டில் அவனோட பூர்வீக வீட்டில் இருப்பதாகச் செய்தி கிடைச்சுது. எல்லா விவரமும் தெரிவிச்சு நான் மதுரைக் குக் கடிதம் எழுதினேன். என் மாமியார் உடனேயே புறப்பட்டு இங்கே வந்தார். எல்லோருமா கூடி ஆலோசிச்சோம்...'

'பாலக்காட்டில் போய்த்தான் ராஜியைக் கூட்டிக்கிட்டு வந்தீங்களா?'

ஆமா - நம்மவங்களில் நல்ல ஆரோக்கியமுள்ள வாட்ட சாட்டமான ஏழெட்டு தடியன்களையும் கூட கூட்டிக்கிட்டு ரெண்டு டாக்ஸியில் - டாக்ஸி டிரைவர்களிடமும் விஷயமெல் லாம் சொல்லி வச்சிருந்தோம். பாலக்காட்டுக்குப் போனோம். பொம்மனாட்டியா என் ஆத்துக்காரியை மட்டுமே கூட்டிக்கிட்டுப் போயிருந்தேன். ஒரு காரை பஸ் ஸ்டாண்டுப் பக்கமா ஒதுக்கிப் போட்டுவிட்டு, முதலில் நாங்க நாலைஞ்சு பேர்கள் அவுங்க அகத்துக்குள் ஏறிப் போனோம்... எங்களைக் கண்ட உடனேயே கொஞ்சம் மரியாதை இல்லாமல் அவுங்க தோப்பனார், மகன், அம்மா, எல்லோருமா தாறுமாறா ஏசினாங்க. அவ என் பெண்டாட்டி பார்க்க முடியாது... கெட் அவுட்...' அப்படீன்னு சத்தம் போட்டான் சேஷன்.

'கர்ப்பமா இருக்கிற பெண் இப்போ பிறந்தகத்தில் இருப்பதுதான் முறை' என்று பேசத்தொடங்கிய என்னை முழுதும் பேச விடவில்லை அவன்.

‘அதெல்லாம் எங்களுக்குத் தெரியும்; மைன்ட் யுவர் பிஸினஸ்…’ என்று கத்தினான். இனியும் தாமதிப்பது சரியல்ல என்று நானும் குரலைக் கொஞ்சம் உயர்த்தியே சொன்னேன். ‘நீங்க இப்படிச் சொல்லி விட்டா நாங்க இறங்கிப் போய்விடப் போவதில்லை. எதுக்கும் துணிஞ்சு தான் நாங்க இப்போ இங்கே வந்திருக்கிறோம்… இப்போ ராஜியை எங்களுக்குக் காட்டாட்டி இங்கே கொலை விழும்.’ …என் கூட வந்திருந்தவங்களும் எழுந்திருந்து நின்னாங்க… கடைசியில் வேறு வழியில்லாமல் ராஜியை உள்ளேபோய்க் கூட்டிக்கிட்டு வந்தான். ஆள் அடையாளம் தெரியாமல் இளைச்சுத் துரும்பாகி விட்டிருந்தாள். ஒரு வார்த்தைகூட வாய் திறந்து எங்களிடம் அவளால் பேச முடியவில்லை… மாலை மாலையாய்க் கண்ணீர் விட்டுக்கொண்டிருந்தாள். முன் திட்டப் படி நானும் மற்ற ஆண் பிள்ளைகளும் சேஷனையும் அவன் அப்பா அம்மாவையும் தடுத்துக்கிட்டு நிற்க, நொடிப் பொழுதில் என் ஆத்துக்காரி ராஜியின் கையைப் பிடித்திழுத்துக்கொண்டு வெளியில் ஓடி, தயாராக நின்ற காரில் ஏற, கார் பறந்து சென்று மறைந்தது. நாங்க எல்லோரும் கொஞ்ச நேரம்கூட அங்கேயே நின்று, அவங்களிடம் அவங்க வேகத்திலேயே காரசாரமாய்ப் பேசி விட்டுக் கைகலப்பு நடக்கும் கட்டம் வரை வந்தது. நடக்கவில்லை அவ்வளவுதான். பஸ் ஸ்டாண்டில் வந்து காரில் ஏறி இங்கே வந்து விட்டோம்… பிறகு பத்திரமா அவ அம்மாகூட மதுரைக்குக் கொண்டுபோய் விட்டுவிட்டு வந்தோம்…’

‘பிரசவம் அங்கேதான் நடந்ததா?’

‘ஆமாம்… மதுரையில் நடந்தது. ட்வின்ஸ் - இரட்டைக் குழந்தைங்க… ஒரு ஆண், ஒரு பெண்…’

‘இப்போ குழந்தைகள், ராஜி எல்லாம் எங்கே இருக்கிறாங்க?’

‘ராஜி ஸ்டேட்ஸில்… குழந்தைகளுக்கு இப்போ எட்டு வயசிருக்கும். போர்டிங் ஸ்கூலில் படிச்சுக்கிட்டிருக்கிறாங்க. அடுத்த வருஷம் வரும்போது குழந்தைகளையும் கூட்டிக்கிட்டுப் போய்விடுவாள்.’

‘என்ன?’

‘ஆமாம்... ஏற்கெனவே அவ பி.எஸ்.ஸி. பாஸாகியிருந்தாள். பிரசவம் கழிந்த பிறகு, பங்களூரில் எம்.எஸ்.ஸி.க்குச் சேர்ந்து படித்தாள். அங்கே ஹாஸ்டலிலும் அடிக்கடி சேஷன்போய் தொந்தரவு செய்தான். ஆனால், வார்டனுக்கும் மற்றவங்களுக் கும் எல்லாக் கதையும் தெரியுமாதலால் அவனால் ஒன்றும் செய்ய முடியவில்லை. பங்களூரில் அவள் புரொபஸரின் ஏற்பாட்டில்தான் அமெரிக்காவில் ஒரு வேலையும் கிடைச்ச போது அங்கே போய்ச் சேர்ந்து விட்டாள். இப்போது இவன் அடிக்கடி, இப்படி வந்து எங்களைத் தொந்தரவு செஞ்சுக்கிட்டிருக்கிறான். அவன் நினைப்பு இங்கே எங்கோ அவளை நாங்க பூட்டி வச்சிருக்கிறோமுன்னு! உங்களைப்போல் என்னைத் தெரிஞ்ச எனக்கு வேண்டிய அகங்களில் எல்லாம் போய், இப்படித் தொந்தரவு வேறு செய்துகொண்டிருக்கிறான். இனி அங்கே வந்தால் தப்பித் தவறிக்கூட அவனுக்கு இரக்கம் காட்டி காப்பி, சாப்பாடு, அது இது ஒண்ணும் கொடுத்தி டாதீங்க... உடனடி போலீஸைக் கூப்பிட்டுப் பலமா ரெண்டு கொடுக்கச் சொல்லுங்கோ... அதுதான் அவனுக்கு வேணும்... பிறகு அந்தப் பக்கம் வரமாட்டான்.’

08.08.1974 - சுதேசமித்திரன், 11/1974

# 4. மாத்திரை

ரா மச்சந்திர ஐயரின் வீட்டுப் படியை நனைத்துக் கொண்டிருந்த போக்கு வெய்யிலை மிதித்தவாறு அழைப்பு மணியை நான் அழுத்தும்போது எனக்கு முன்னால் என் நிழல் அவர் வீட்டு வராந்தாவில் நெடுஞ்சாண் கிடையாக விழுந்து விட்டிருந்தது.

எப்போதும் காரியாலயத்தில் தென்படும் கால்சராய், முழுக்கைச் சட்டை இத்யாதி வேஷத்திற்கு விபரீதமாக, இடுப்பு வேஷ்டி, சட்டை இல்லாத வெற்றுடம்பில் கிராஸ் பெல்டாகப் பூணூல் இப்படி மஃப்டியில் பிளஷ் டோரைத் திறந்துகொண்டு, ராமச்சந்திர ஐயர் பிரத்யட்சமானபோது, எனக்கு முதலில் அவரிடம் என்ன கேட்பதென்று தெரியவில்லை.

'நீயா... ஆபீஸிலிருந்து நேர வர்றியா?'

'ஆமா... அரை மணி நேரமே இறங்கினேன்... இப்போ எப்படியிருக்கு?'

'பரவாயில்லை... பத்து நாள் ஆஸ்பத்திரியில் இருந்துட்டு நேற்றைக்குத்தான் கூட்டிக்கிட்டு வந்தோம்.'

ஸெட்டியில் அவர் எதிரில் நானும் உட்கார்ந்தேன்.

'டாக்டர் கூட்டிக்கிட்டு வரலாமுண்ணு சொன்னாரா?'

'ஆமா... இப்போ யூரின், பிளட், ஷுகர் எல்லாம் நார்மல் ஆயாச்சு... ஆனா... மூளை மட்டும் ஆர்டிஃபிஷியல் விவகாரங் களை அவ்வளவு சீக்கிரம் ஏத்துக்குவதில்லை. நாள்பட, தானாகத்தான் சரியாகணும். வீட்டுக்குப்போயும் அதிகமாய் அலட்டிக்க விடக் கூடாது; இந்தத் தடவை எதுக்கும் பரீட்சை எழுத வேண்டாம்; கொஞ்சம் கொஞ்சமாய்த்தான்

அவளைப் பழைய நினைவு வரச் செய்யலாம்; இனி க்ளூக்கோஸ் கொடுக்க வேண்டாம்; ஒருவேளை வாந்தி தொடங்கி விடும்' அப்படின்னு எச்சரித்து வீட்டுக்குக் கூட்டிக்கிட்டு வர அனுமதிச்சார் டாக்டர் ரிஷி.'

'வீட்டுக்கு வந்ததுக்கு எப்படியிருக்கு?'

'டாக்ஸியிலிருந்து இறங்கி இந்த வராந்தாவில் வந்து ஏறினதும், 'என்னை எதுக்கு இப்படிப் பிடிச்சிருக்கிறீங்க? நானே நடந்துக் குறேன்' அப்படிண்ணு சொல்லி விட்டு உள்ளே விடுவிடுண்ணு வந்தாள். மேலே மாடியில் அவள் அறைக்கெல்லாம் போய்ப் பார்த்தாள். பிறகு தடதடவென்று இறங்கி வந்து, 'இது எங்க வீடு அல்ல, வேற யாருடையதோ' அப்படீண்ணு சொல்றா...'

'இது எப்படி நடந்தது...? நீங்க யாரும் கவனிக்கல்லியா?'

எல்லாம் தலையெழுத்து... பிறகென்ன... இன்னிக்குத் திங்கட் கிழமையில்லே...? போனதுக்கு முந்திய வெள்ளிக்கிழமை அன்னிக்குக் காலம்பர இவ - காயத்திரி - என்னவோ வயிற்று வலின்னு சொன்னாண்ணு என் அகத்துக்காரி அடுத்த தெரு டாக்டர் ரிஷிகிட்டே கூட்டிக்கிட்டுப் போனாள். அவர் கம்ப்ளீட்டா டெஸ்ட் பண்ணிப் பார்த்துவிட்டு, 'ஒண்ணும் இல்லே, வெறும் கியாஸ் ட்ரபிள்; ஒரு மாத்திரை எழுதித் தாரேன்; ஒரு தடவைக்கு ரெண்டு வச்சு மூணு நேரம் சாப்பிடணும்; பத்து நாளைக்கு அறுபது மாத்திரை வாங்கிக்குங்க' அப்படீண்ணு சொல்லி மருந்தைப் ப்ரிஸ்க்ரைப் பண்ணிக் கொடுத்தார்.

டாக்டர் வீட்டிலிருந்து இங்கே வர வழியில் இருக்குதில்ல தனராஜ் மெடிக்கல் ஸ்டோர், அங்கிருந்து மருந்தையும் வாங்கிக் கொண்டு வந்தாள்; வந்ததும் ரெண்டு சாப்பிட்டாள். மத்தியானம் ரெண்டு, சாயந்திரம் என் இளைய பையன் மணி - அவன் தேர்ட் ஸ்டேன்டர்ட் இங்கிலீஷ் மீடியம், கான்வன்ட் ஸ்கூலில் படிக்கிறான் - அன்னிக்கு ஸ்கூல்லே ஏதோ டிராமா, டான்ஸுன்னு சாயந்தரம் கூப்பிட்டான். அவன்கூட நான், பார்வதி, என் ரெண்டாவது மகள் பாலா எல்லோருமா இறங்கினபோது காயத்ரி, 'எனக்கு என்னமோ அசதியா இருக்கு. ரொம்பப் படிக்கவேண்டி வேறே இருக்கு. நீங்க எல்லோரும் போயிட்டு

வாங்க’ அப்படீண்ணு சொன்னாள்... அவ பி.ஏ. கடைசி வருஷம் படிச்சுக்கிட்டிருக்காள்.

ஒரு வேளை மருந்தின் ரியாக்ஷனா இருக்குமோண்ணு, ‘நாலு டேப்ளட்ஸ் சாப்பிட்டாச்சல்லவா... இனி ஒண்ணு வச்சு சாப்பிட்டாப் போதும்’ண்ணு அவளை எச்சரித்து விட்டு நாங்க எல்லோரும் ஸ்கூலுக்கு வந்தோம். ராத்திரி ஒம்பது மணிக்குப் புரோகிராம் எல்லாம் முடிஞ்சு வெளியே காரில் ஒரு லிப்ட் கிடைச்சுது... இங்கே வரும்போது, தூரத்திலிருந்தே கவனிச் சோம்.

வீட்டில் ஒரு லைட் பாக்கியில்லாமல் எல்லா லைட்டும் எரிந்துக் கிட்டிருந்தது. வெளி கேட்டை ரெண்டு மூணு தடவை தட்டியும் உள்ளேயிருந்து எந்தச் சத்தமும் இல்லை. மனசுக்குள் சொல்லத் தெரியாத வெப்பிராளம். உள்ளே குனிந்து கேட்டின் தாழைத் திறந்துகொண்டு இங்கே வந்தோம். நல்ல வேளை, பிளஷ்டோர் உள்ளிருந்து தாழிடப்பட்டிருக்கவில்லை.

நடுக் கூடத்துக்கு வந்தபோது, அங்கே கீழே ஒரு பாயில் குப்புறக் கிடக்கிறாள் காயத்ரி... ரத்தம் முழுவதும் வடிந்து போய் விட்டதைப்போல் அவள் முகமும் உடம்பும் எல்லாம் வெளுத்து வெளிறிப் போய்க்கிடந்தது. கை கால்கள் ஐஸ்போல் விறைத்து விட்டிருந்தது...

பிறகென்ன, எல்லோரும் ‘ஓ’ண்ணு சத்தம் போடத் தொடங்கிட் டாங்க... எனக்கு ஒண்ணும் புரியல்லே... ‘வெள்ளிக்கிழமையும் அதுவுமா த்ரிசந்தி நேரத்தில் வயசு வந்த பெண்ணைத் தனியாக விட்டு விட்டுப் போயிட்டோம். எதையாவது பார்த்துக் குழந்தை பயந்துட்டாளோ?’ அப்படீண்ணு பார்வதி அழுகையுடன் புலம் பத் தொடங்கிட்டாள். நான் உள்ளுக்குள் குமுறிக்கிட்டிருந்த பயத்தையும், பரிதவிப்பதையும் எல்லாம் அடக்கிக்கொண்டு எல்லோரையும் சும்மா இருங்கோண்ணு சமாதானப்படுத்தி விட்டு அவள் பக்கத்தில் உட்கார்ந்தேன்.

அவள் தலையை என் மடியில் தூக்கி வைத்துக்கொண்டு, ‘காயத்ரீ காயத்ரீ... உனக்கு என்னம்மா செய்யது’ண்ணு கேட்டேன். மெல்ல அவள் விழிகள் அலைவது தெரியுது! கிருஷ்ணமணி மேலே செருகி

விட்டதைப்போல் வெள்ளை மட்டும் தெரிந்தது. லேசாக முனகினாள். வாயிலிருந்து எச்சில் வடியுது. நான் மறுபடியும் கேட்டேன். என்னவோ பேச முயற்சிப்பது தெரிந்தது... ஆனா நாக்கு ஒத்துழைக்காமல் பலகீனமாய் சாப்பா... சாப்பா... இப்படி என்னவோ ஒரு ஒலி... அதுவும் அவள் சுதாவான குரல்போல் இல்லை. கரடு முரடான தரையில் கட்டை வண்டி போவதுபோல் ஒலித்தது.

'இந்த நிலைமையில் டாக்டர்கிட்டே எப்படிக் கூட்டிக்கிட்டுப் போவது? நானே ஓடிப்போய் டாக்டர் ரிஷியைக் கூட்டி வர்ரேன்' என்று பாலாவையும் கூட்டிக்கிட்டு பார்வதி இறங்கினாள். 'டாக்டர் காலம்பர எழுதித் தந்த ப்ரிஸ்க்கிரிப்ஷனையும் கையில் எடுத்துக்கிட்டு ஓடிப்போய்விட்டு வா' என்று சொல்லி அனுப்பினேன்.

மண்ணிலிருந்து அறுத்தெடுத்த கீரைத் தண்டைப்போல், காயத்ரி துவண்டு என் மடியில் கிடந்தாள்... சித்தே நேரத்தில் பார்வதி வந்து சொன்னாள்... டாக்டர் கிட்டே விஷயத்தைச் சொன்னப்போ, 'காலம்பர நான் கம்ப்ளீட்டா செக் பண்ணிய கேஸ், அவளுக்கு ஒண்ணும் இல்லே. நீங்க எல்லோருமா டோன்ட் மேக் எ ஃபஸ். பேசாம அவளைத் தூங்க விடுங்கோ... வேணுமுண்ணா கொஞ்சம் பிளாக் காப்பி போட்டுக்கொடுங்கோ... நாளைக்குக் காலம்பர இங்கே கூட்டிக்கிட்டு வாங்க... நான் மெடிக்கல் காலேஜில் வேலை பார்க்கிறவன். சாதாரணமா எந்தப் பேஷண்டையும் அவர்கள் வீட்டில் போய்ப்பார்ப்பதில்லை. அதுவும் இந்த நேரத்தில் நான் அங்கே வந்தா அனாவசியமா புகார் வரும்... எதுக்கும் பொழுது விடியட்டும்' அப்படீண்ணு சொல்லி விட்டார்,' என்றாள். பிறகென்ன?

அன்னிக்கு ராத்திரி மாதிரி இந்த அம்பது வருஷ வாழ்க்கையில் ஒரு சித்திரவதையை நான் அனுபவிச்சதில்லை. கொஞ்சம் கொஞ்சமாய் காயத்ரி அவள் அல்லாமலாகிக் கொண்டிருந்ததைக் கொட்டு கொட்டுண்ணு பார்த்தவாறு ராவைக் கழிச்சோம்; நாலு மணி அடிக்கல்லே. காயத்ரியின் உடம்பு ஐஸ் கட்டி மாதிரி மூச்சுக் கூட இல்லாததுபோல்... 'சரி... பார்த்துக்கோ... இதோ வந்துட்டேண்'ணு

பார்வதிகிட்டே சொல்லி விட்டுப் பைத்தியம் பிடிச்சவனைப்போல் தெருவில் இறங்கி ஓடினேன்.

டாக்டர் ரிஷியின் வீட்டு கேட்டைப் படபடவென்று நான் தட்டிய சத்தத்தில் அவர் வீட்டில் எல்லோரும் எழுந்திரிச்சுட்டாங்க. 'நீங்க உடனேயே வரணும்... எனக்கு ஒண்ணும் சொல்லத் தெரியல்லே... ஆனா... இப்போ நீங்க வராட்டி அப்புறம் நீங்க ரொம்பப் பச்சாதாபப்பட வேண்டியிருக்கும்...' இப்படி என்னவெல்லாம் அப்போ சொன்னேன்னு இப்போ சரியாக எனக்கு ஞாபகம் இல்லே. நான் நின்ன நிலையைப் பார்த்த டாக்டருக்கு அப்போ எங்கிட்டே ஒண்ணும் தர்க்கிக்கத் தோணவில்லை போலிருக்கு...

'சரி... நீங்க முன்னால் போங்க. நான் இதோ வந்துட்டேன்' அப்படீண்ணு சொல்லி உள்ளே போனார். நான் திரும்பி ஓடி இங்கே வந்ததும் அவர் தன் காரில் வந்து இறங்கினார். 'நீங்க எல்லோரும் அனாவசியமா பெரிசுபடுத்தறீங்க' என்று சொன்னவாறே உள்ளே வந்தார். 'அடீ காயத்ரீ... என்ன சும்மா விளையாடுறியா?' என்று அவள் தோளில் தட்டியதும் திடுக்கிட்டு அவளைக் கூர்ந்து பார்த்துக் கொண்டிருக்கும் போதே திடீரென்று அவர் முகத்தில் நிரம்பி நின்ற சுமூக பாவம் விலகி, ஒரு கலவரம் சூழ்ந்து கொண்டது.

'சரி... சரி... உடனேயே ஆஸ்பத்திரிக்குப் போயிடுவோம்... இன்னிக்கு என்.ஓ.பி.டேட் அல்ல. டாக்டர் ஜார்ஜை போனில் கூப்பிட்டுச் சொல்லிக்கிறேன். உம் இறங்குங்கோ...' என்று விட்டு அவர் விரைந்து போய் காரில் ஏறும்போது, 'டாக்டர் இந்த பில்ஸைத்தான் கொடுத்தோம்' என்று பார்வதி மீதியிருந்த பில்ஸ் பாக்கட்டை எடுத்து நீட்டினாள்... அதைக் கையில் வாங்கி, தெரு லைட் வெளிச்சத்தில் பார்த்தாரோ இல்லையோ... இப்போது டாக்டரின் முகத்திலும் காயத்ரியின் முகத்தில் போல் ஒரு பிரேதக் களை... 'ஐயோ... ஆபத்தாச்சே... இதையா கொடுத்தீங்க? இதில் எத்தனை மாத்திரை சாப்பிட்டாள்' என்று குரல் நடுங்கக் கேட்டார்... அஞ்சு என்றாள் பார்வதி... 'சரி... சரி... இனிப் பேசிக்கிட்டு நிற்பதில் அர்த்தம் இல்லை... எல்லாம் கடவுளின் தலையில்

பாரத்தைப் போட்டுவிட்டு, உடனேயே ஆஸ்பத்திரிக் குப் போகணும்... இதோ டாக்ஸியை வரச் சொல்லுகிறேன். பிள்ளையார் கோயில்வரை போய்விட்டு உங்க பின்னாலேயே நானும் ஆஸ்பத்திரிக்கு வாறேன்' என்று விட்டு அவர் காரில் ஏறிப் போனார்... டாக்ஸியில் கட்டையாய் விறைத்துப் போய்க்கிடந்த காயத்ரியைத் தூக்கிப் போட்டுக்கொண்டு ஆஸ்பத்திரிக்குப் போனோம்.

அங்கே போய்ச்சேரும்போது, 'எல்லாம் ரெடி... கீழே வைத்து இன்ஜெக்ஷன் கொடுத்து விட்டு, கண்மணி மூவ் பண்ணு கிறதாண்ணு பாருங்க. மூவ் பண்ணுகிறதாய்த் தெரிஞ்சா மேலே கொண்டு வந்தால் போதுமுண்ணு ப்ரொபசர் சொல்லியிருக் கார்'னு டாக்டர் ஜார்ஜ் ரிஷியின் செவியில் கிசுகிசுப்பது என் காதிலும் விழுந்தது... உம்... பிறகென்ன ஒரு தலை மயிர் இழையில் அவள் உடம்பில் ஜீவன் தொங்கிக் கொண்டிருந்தது. மேலே வார்டுக்குக் கொண்டுபோக வேண்டிய தாமதம், ரெண்டு கையிலும் டிரிப் கொடுத்தாங்க. இன்ஜெக்ஷன் போட்டாங்க. வேறு என்னென்னமோ செய்தாங்க. எப்படியோ தெய்வாதீனமா அவ பிழைச்சுட்டாண்ணு மட்டும் சொன்னா போதுமே...'

'டிரக் மாறிப் போச்சு இல்லையா?' என்றேன்.

'ஆமாம். கியாஸ் ட்ரபிளுக்கு டைமாஸ் என்ற மருந்து எழுதியிருக்கார். பாவி, அந்த மெடிக்கல் ஷாப்காரன் டயபட்டிக் பேஷண்டுக்குக் கொடுக்கும் டயோனிலைத் தந்து விட்டிருக்கான். இதே ஆஸ்பத்திரியில் இதே மாதிரி ரெண்டு கேஸ் வந்திருக்காம். ரெண்டும் பிழைக்கலை; இவளும் ஒரு மாத்திரைக் கூடச் சாப்பிடவோ, இல்லை ஒரு அஞ்சு நிமிஷ நேரம் தாமதிக்கவோ செஞ்சிருந்தா, பிறகு பார்க்க வேண்டாம்.'

'ஆனாலும் அந்த டாக்டருக்கு, 'நீங்க கொடுத்த மருந்தை எடுங்கோ'ண்ணு கேட்டு வாங்கிப் பார்க்கத் தோணல்லியோ? நல்லவேளை; தெய்வாதீனமாக உங்க மனைவி அதைக் கொண்டு வந்து காட்டியிருக்கிறார்...'

‘ஆமா... அதனால்தான் சீக்கிரம் டயக்னோஸ் செஞ்சு சிகிச்சை ஆரம்பிக்க முடிஞ்சுது. இல்லாட்டி, இவுங்க ஒவ்வொரு டெஸ்டா பண்ணிப்பார்த்து டயக்னோஸ் செஞ்சு கண்டு பிடிப்பதுக்குள்ளே எல்லாம் க்ளோஸ் ஆகியிருக்கும். ஆனாலும்... அவர் டாக்டர் ரிஷி அன்னிக்கு நான் போய்க் கூப்பிட்டவுடன் வந்ததோடு, கூடவே ஆஸ்பத்திரிக்கு வந்து வேண்டியதைச் செஞ்சதனாலேதானே காயத்ரி உயிர் பிழைச்சாண்ணு அவர் மேலே நன்றி உள்ளவன்தான் நான்.’

இப்போது கேட்டைத் திறந்து கொண்டு குடையும் கையுமாய் ஒருவர் ஏறி வருகிறார். ‘வீட்டுக்குக் கூட்டிக்கிட்டு வந்தாச் சுண்ணு கேள்விப்பட்டேன். இப்போ எப்படியிருக்குது?’

‘உம் உம்... பரவாயில்லே.’

‘சார்... தயவு செஞ்சு நீங்க புகார் எழுதிக் கொடுத்து விடாதீங்க. அப்புறம் என் டிரக் லைஸன்ஸைக் கேன்சல் பண்ணி விடுவாங்கண்ணு மட்டுமல்ல. வழக்கு அது இதுண்ணு அலைய வேண்டி வந்துடும்.’

‘ஆமாமா. உம்ம கவலை உமக்கு... என் பெண் உயிரோடு திரும்பக் கிடைச்சது எங்க பாக்கியம்; இன்னும் மூளை சரியாகல்லே... நீங்களெல்லாம் இப்படி மருந்து வியாபாரம் செஞ்சா, சுகமா இருக்கிறவங்க எல்லோரும் சீக்கிரம் போய்ச் சேர்ந்துடுவாங்க.’

‘இல்லை சார். என்னவோ தவறு நேர்ந்திடுச்சு. அந்தப் பையன் கடையில் புதுசா சேர்ந்திருக்கான். அவன் செஞ்ச காரியம் இது. அதோடு இந்த டாக்டர்மார்களின் கையெழுத்தைப் படிச்சுப் புரிஞ்சிக்குவது கொஞ்சம் சிரமம். மருந்துகளின் பெயர்களிலும் பெரிய வித்தியாசம் தெரிவதில்லை.’

‘அப்படிச் சந்தேகம் இருந்தா என்ன வியாதிக்குண்ணு வாயைத் திறந்து கேட்கலாமே... அதை விட்டுவிட்டு இப்படிக் கையில் கிடைச்சதை எடுத்துக் கொடுப்பதா?’ என்று அவரிடம் சொல்லி என்னை நோக்கி, ‘இந்தச் சம்பவத்துக்குப் பிறகு டாக்டர் ரிஷி காப்பிட்டல் லெட்டரில்

கொட்டை கொட்டையாகத்தான் இப்போது மருந்து ப்ரிஸ்க்ரைப் பண்ணுகிறார்' என்றார் ஐயர்.

பிறகு, 'சரி சரி... உம்ம கிட்டே இப்போ எதுக்கு வம்பு... எங்களுக்கு எங்க மகள் சுய ஸ்மரணையோடு நல்லபடியாக திரும்பக் கிடைச்சா போதும்' என்று சொல்லி வந்தவரை அனுப்பி வைத்தார்.

இப்போது உள்ளேயிருந்து அவர் மனைவி, 'யாரது... மெடிக்கல் ஷாப் ஓனர் பாவியா... போயிட்டானா' என்று சொல்லிக் கொண்டே வந்தாள்.

'...உம் தொலைகிறான். இதெல்லாம் நம்ம தலை விதி... இவள் இப்போ இப்படி இருக்கறச்சே, இனி அவன் சாபத்தைக்கூட வாங்கிக் கட்டிக்கணுமா?' என்று அவர் கேட்டபோது, 'இவன்களையெல்லாம் இப்படியே விட்டு வச்சா... இனியும் எத்தனை பேருடைய உயிரை வாங்கப் போகிறானோ?' என்று என்னமோ பொருமியவாறு உள்ளே சென்றாள் அவள்.

17.02.1975 - குமுதம் 20.03.1975

## 5. இல் – அறம்

‘அ ம்மா அம்மா… கதவைத் திறங்கோ… கதவைத் திறங்கோ…’

பின்னால் சமையலறைக் கதவைத் தட்டும் ஓசையுடன் ஒரு பதட்டமான குரல்.

கையிலிருந்த புத்தகத்தில் இருந்த கமலம்மையின் விழிகள் ஜன்னல் வழி இருண்ட புழக்கடையில் துழாவின.

அறைக்குள்ளிருந்த மின் வெளிச்சம் வெளியில் இருளை இன்னும் அதிகமாக்கிக் காட்டியது.

மறுபடியும், ‘அம்மா… நான்தான். கதவைத் திறங்கோ’ என்ற அடக்கமான பரபரப்பின் சத்தம்.

கூர்ந்து பார்த்தபோது…

அது எதிர் வீட்டு பங்கியல்லவா…

இவளுக்கு இங்கே என்ன வேலை…

இவளை வீட்டுக்குள்ளே எப்படி ஏற்றுவது - அதுவும் சமையல றைக்குள் - என்றெல்லாம் நினைத்தவாறு கூடத்தைச் சுற்றிக் கொண்டு சமையலறைக்குள் வந்து கதவைத் திறந்தாளோ இல்லையோ, ஒரு சுழல் காற்றைப்போல் உள்ளே வந்தாள் பங்கி. கூடவே வியர்வையின் ஒரு கனத்த நெடியும்…

‘அம்மா லைட்டை அணைச்சுடுங்கோ… அந்தக் காலா மாடன் பின்னால் வந்துக்கிட்டிருக்கான்; என்னை இப்போ கண்டா கொண்ணு போடுவான்’ என்றவாறு கதவை அவளே அடைத்து விட்டு, அங்குமிங்கும் பார்த்து

ஓடிப்போய் ஸ்விட்சை அணைத்து விட்டு அடுப்படியில்போய் பதுங்கிக்கொண்டாள்.

வெளியில் கொல்லையில் டார்ச் ஒளி முன் செல்ல, பங்கியின் மாப்பிள்ளை வாமன் ஓடிச்செல்வது தெரிந்தது.

‘உம்... என்ன இண்ணைக்கு?’

‘சாந்தியில் அருமையான சினிமா... ‘குடும்பினி’. ஒரு வாரமா அவன்கிட்டே சொல்லிக்கிட்டிருக்கேன். கூட்டிக்கிட்டுப் போண்ணு! மூண்டு கேக்கல்லே... இண்ணைக்கும் சொன்னேன்... ‘சலம்பாம சோலியைப் பார்த்துட்டு கெடடீ, எரப்பாளீண்’ணு சொல்லிட்டு வெளியிலே போயிட்டான். சித்த முந்தி தயிர்க்காரி பார்க்கவியக்கன் வந்து சொல்லுதா.... ‘ஏட்டீ பங்கீ... உனக்கு கெட்டியவன் எவளோ ஒருத்தியையும் கூட்டிக்கிட்டு கொட்டகைக்குள்ளே போறான்’ண்ணு. என்னால் பொறுக்க முடியல்லே... இந்த ரெண்டு புள்ளைகளையும் தூக்கிக்கிட்டு ஓடினேன். சும்மா சொல்லப்படாது. அவ என்னைப் போல் இல்லை; நல்ல செகப்பா ஷோக்கா இருக்கா... அவ கழுத்தில் கையப் போட்டுக்கிட்டு அந்த மூளி அலங்காரிக்கு அவன் கலர் வாங்கிக் கொடுப்பதைப் பார்த்தப்போ எனக்கு ஈரக் கொலை பத்தி எரிஞ்சது. சின்னவன் பாலனை மெல்ல அவகிட்டே தள்ளி விட்டேன்.

அவன்போய், ‘அப்பா எனக்கும் கலர் வாங்கித் தா’ண்ணு கேட்டான். அசந்து போனான்...

சினிமா கொட்டகையுண்ணு பார்க்காமெ முதலில் அவனுக்குக் கொடுத்தான். அப்புறம் என் மூஞ்சியிலும் நெஞ்சிலும் எல்லாம் கும்கும்முண்ணு குத்துவிடத் தொடங்கிட்டான். ‘கொல்லு வானோ’ண்ணு கூப்பாடு போட்டுக்கிட்டு அங்கிருந்தே ஓடி வாறேன். கூட அவனும் துரத்திக்கிட்டு வந்தான்...’

‘ஆமா... இது உனக்கு முன்னாலேயே தெரியுமா?’

‘தெரியும். நான் கெளவி ஆயிட்டேன். இனி அவகிட்டயே போய்ச் சேர்ந்துடுண்ணு அவன்கிட்டே எவ்வளவோ தடவை சொல்லிப்

பார்த்தாச்சு; கேட்டாத்தானே; அவனுக்குக் கொட்டுவடி பிஸினஸுக்கு நான் இல்லாமெ முடியாதே.'

இன்று காலையிலும் எக்ஸைஸ் வேன் பங்கியின் வீட்டு நடையிலிருந்த பெட்டிக் கடையின்முன் வந்துநின்று தடதடவென்று போலீஸ்காரங்க கடைக்குள் ஏறிப் புட்டிகளை 'படார் படார்' என்று வீசியெறிந்து உடைத்ததை கமலம்மையும் கண்டிருந்தாள்.

'இண்ணைக்கு காலம்பரெயும் போலீஸ் வந்தது போலிருக்கே.'

'ஆமா... எல்லாம் காலிப் புட்டிகள். வீட்டுக்குள் என்னைச் சுற்றி தலையணைக்கு அடியில், சாமி படத்தின் பின்னால் எல்லாம் அம்பது புட்டியில் சரக்கு இருந்தது. எனக்குக் கெதம் கெதமா இருந்தது. நல்லவேளை, வீட்டுக்குள் வரல்லே... உம். இண்ணைக்குப் பரவாயில்லே... போன வருசம் வயித்து வலிண்ணு ஆஸ்பத்திரியில் கிடந்தான் அவன். நான் காலம்பர விஜயன்கிட்ட வாடிக்கைக்காரங்களைக் கவனிக்கச் சொல்லி விட்டு ஆஸ்பத்திரிக்குக் கஞ்சி கொண்டு போயிருந்தேன். அப்போ விஜயன் யாருக்கோ ஊற்றிக் கொடுப்பதை எக்ஸைஸ் போலீஸ்காரன் பார்த்துக்கிட்டுப் போயிருக்கான். நான் வீட்டுக்கு வந்து பாத்திரத்தைக் கொண்டுபோய் வச்சுவிட்டு கடையைத் திறந்து உக்காரல்லை. ஒரு டாக்ஸி வந்து நிண்ணுது. திமு திமுண்ணு அஞ்சாறு பேருங்க வந்து சோதனை போட்டாங்க; நல்லவேளை அப்போ ரெண்டே ரெண்டு புட்டிகள்தான் இருந்தன. என்னைப் போலீஸ் டேசனுக்குப் புடிச்சிக்கிட்டுப் போனாங்க. அந்தக் கேஸ் இப்பவும் நடக்குது. இப்படி எத்தனை தடவை? எனக்குப் பழகிப் போயிடிச்சி... ஆம்புளைங்களைப் புடிச்சிக்கிட்டுப் போனா அடிச்சி நொறுக்கிடுவாங்க. பொட்டச் சிக நாமொ போனா ஒரு நா ராத்திரி லாக்கப்பிலெ போட்டுக் கேசு பதிச்சுவிட்டு வெளியே அனுப்பி வைச்சிருவாங்க... அவ்வளவு தான், அப்படி அவனைக் காப்பாத்த நான் எத்தனை தடவை உள்ளே போயிட்டு வந்திருக்கேன் தெரியுமா? அப்படி காசு சம்பாதிக்க நான்; அனுபவிக்க எவளோ ஒருத்தி...'

'ஆமா... உங்க கல்யாணம் நடந்து எத்தனை வருசம் இருக்கும்?'

‘ஏழு வருசம் இருக்கும்.’

‘ஏழு வருசமா? அப்போ விஜயன்...?’

‘விஜயனுக்குப் பத்து வயசுக்கு மேலிருக்கும் என்ற சங்கதி கமலம்மையின் நெஞ்சை உறுத்தியது.

‘ஒண்ணும் சொல்ல வேண்டாம். விஜயன் இவனுக்குப் பொறந்த வன் இல்லையம்மா?’

‘என்ன?’

‘ஆமா... என் தங்கச்சியின் மாப்பிள்ளை ஒரு போலீஸ்காரன். அடிக்கடி வருவதைப் பார்த்திருப்பீங்களே...’

‘ஆமா!’

‘அவன்தான் என் மொத புருசன். விஜயன் பொறந்த அடுத்த வருசம் ஒருநாள் ராத்திரி, ‘எடி... பங்கி... என் தங்கக் கொடம்... ஒங்கிட்டெ ஒண்ணு சொல்லுவேன். தட்ட மாட்டியே... என் பொன்னே... அப்படீண்ணு என் செவியில் சொன்னான். ‘சும்மா சொல்லு... அதிகம் கொஞ்சாதே’ண்ணு சொன்னேன் நான். ‘இல்லை மோளே... உன் தங்கச்சியை நான் கட்டிக்கிடட் டுமா?... அவளுக்குச் சம்மதம்தான்’ண்ணு என்னைக் கட்டிப் புடிச்சுக்கிட்டு சொன்னான். ஆனா எனக்குச் சம்மதம் இல்லேண்ணு சொன்னேன் நான்.

‘ஏண்டீ! அவ வேறெ ஆருமா? உன்கூடப் பிறந்தவதானே’ண்ணு மடக்கினான். ‘அதெல்லாம் சரி... ஆனா உனக்கு அவ இல்லாமெ முடியாதுண்ணா அவளோடு போயிடு... என்னை விட்டு விடு... கக்கத்திலே உள்ளது கீழே விழவும் படாது, உத்தரத்திலெ உள்ளதையும் எடுக்கணுமுண்ணா முடியாது’- அப்படிண்ணு சொன்னேன் நான்.

அவன் எப்படியெல்லாமோ சொல்லிப் பார்த்தான். நான் மசியல்லே. கடைசியில் என் தங்கச்சியைக் கட்டிக்கிட்டு அவளோடு போய்ச்சேர்ந்தான்.

எப்படியானாலும் நான் பெத்தவனில்லியா? அதுதான் விஜயன் எங்கிட்டையே ஒட்டிக்கிட்டான்.'

'அப்போ வாமன்?'

'ரெண்டு மூணு வருசம் நான் தனியாட்டுத்தான் இருந்தேன். இவன் என்னை வளைச்சுப் பிடிச்சுக்கிட்டான். நாங்க சாதியிலே ஈளவங்க. வாமன், வாணியன். அப்போ சாலையில் சுமை தூக்கிக்கிட்டிருந்தான். 'கண்ணே?... பொன்னே! உனக்கு நா ஒரு கொறையும் வைக்க மாட்டேன். அப்படி இப்படி எல்லாம் சொல்லி என்னைக் கட்டிக்கிட்டான்.

பொறவுதான் இந்தக் கொட்டுவடி பிஸினெஸ் - கள்ளச் சாராய யாவாரம் ஆரம்பிச்சான். கொளுத்த லாபம். இப்போ பூத்த பணம். ஆனா எனக்கென்ன பிரயோசனம்... வீட்டுச் செலவுக்கு உப்பு, மிளகு வாங்க எங்கிட்டே பைசா தருவதோடு சரி! பிள்ளைங்களுக்கும் எனக்கும் ஒரு துண்டு துணி எடுப்பதுகூட வருசத்தில் அந்த ஓணத்துக்கு மட்டும்தான். ஆனா அவன் தங்கச்சிக்குப் போனவாரம்கூட பத்தாயிரம் ரூவா சொளையா கொண்டுபோய் கொடுத்திட்டு வந்தான்.'

'அவன் தங்கச்சியா? அவ எங்கே இருக்கிறா?'

'அவனுக்கு ரெண்டு தங்கச்சிக... ரெண்டு பேரும் பாக்கத் தளதளண்ணு இருப்பா... ரெண்டு பேரையும் நம்ம காமாட்சி வீட்டிலே விட்டிருக்கான். அடிக்கடி சினிமா ஸ்டார்போல் அலங்கரிச்சுட்டு டாக்ஸியில் இந்த நடைவெளி, கோவளம் என்னா, நொய்யார் டாம் என்னாண்ணு போவதைப் பார்த்திருப் பீங்களே... அவுங்களுக்கும் நல்ல சம்பாத்தியம்.'

'ரெண்டு பேரையும் கெட்டிக் கெடுக்க ஒண்ணும் செய்யல்லையா?'

'மூத்தவளை மட்டும் கெட்டிக் கொடுத்தான். ஒரே ஒரு பிள்ளை. ஒருநாள் மாப்பிள்ளை பெண்டாட்டிக்கு இடையில் என்னவோ சண்டை. கட்டியிருந்த வேட்டியை உத்தரத்தில் போட்டு நாண்டுகிட்டுச் செத்தான் அவன். பிள்ளையை ஆருக்கோ தத்துக் கொடுத்து இவளை இங்கே கொண்டுவந்துவிட்டான்.

'அடுத்தவ மூத்தவளைவிடச் செக்கச் செவண்ணு சுண்டினா ரத்தம் வந்திடுவதைப் போல் இருப்பா. அவளையும் கொண்டு வந்து விட்டான்; இப்போ சரியான வரும்படி...'

'ஆமா... நீ எவ்வளவு நேரம் இப்படி ஒளிச்சுக்கிட்டு உட்கார்ந் திருப்பே... அவ அப்பா வருகிற நேரம்.'

'அவன் இன்னும் கொஞ்ச நேரத்தில் போயிடுவான் அம்மா... பாண்டிக்கென்னவோ போய் கார் வாங்கி டாக்ஸி அடிக்கப் போறானாம். கையிலிருக்கும் காசுக்கு செலவு வேண்டாமா...'

'இப்போதான் திரும்பிய இடமெல்லாம் கள்ளு ஷாப்பு. சாராயக் கடை எல்லாம் பப்ளிக்கா இருக்கே... அதுக்கெல்லாம் இல்லாத மவுசா இந்தக் கள்ளச் சாராயத்துக்கு...?'

'ஆமாம்மா... இதைக் குடிக்கப் பழகினவங்க வேறெ எந்த தேவாமிர்தம் கெடைச்சாலும் திரும்பிப் பார்க்க மாட்டாங்க' என்று அவள் சொல்லும்போது, அடிக்கடி இந்தப் பங்கியும் இந்தத் திரவத்தில் முழுக்க முழுக்க நனைந்து தெருவில் போகிறவங் களைத் தொண்டை திறந்து கனமான வார்த்தைகளால் அபிஷேகம் செய்வது கமலம்மைக்கு ஞாபகம் வந்தது.

ஒரு தடவை அடுத்த வீட்டில் இருக்கும் பங்கிடின் தங்கச்சியின் கூட உக்கிரமாய் மோதி, உடை விலக உதைகளைத் தாராளமாய் இருவரும் பரிமாறிக்கொண்டதும் நினைவில் இருக்கிறது.

'உம்... முந்தியெல்லாம் எங்கிட்ட அருமையாட்டுத்தான் இருந்தான். கையிலே நாலு காசு வந்தப் பொறவுதான் அவனுக்கு நெலை கொள்ளல்லே. ராத்திரி குடிச்சு மறிஞ்சு விட்டு யாருக்க வீட்டுக் கதவை எல்லாமோ போய்த் தட்டுறான்னு சேதி வந்தது.

போன வருசம் ராத்திரி ரெண்டு மணியிருக்கும். மணக்காடு முக்கில் இவன் குடிச்சுக்கிட்டு ரகளை பண்ணுறாண்ணு நம்ம ஒலைக்கெட்டு மூப்பன் வந்து சொன்னான். அந்த நடுச் சாமத்திலே நா மட்டும் அங்கே எப்படிப் போவேன். குற்றா குற்றி இருட்டு. என் அம்மையையும் கூட்டீட்டு

அங்கே போனேனோ இல்லையோ... 'உங்களை இங்கே ஆரு வரச் சொன்னா...' அப்படீன்னு சொல்லிட்டு என்னை மட்டும் இல்லே. எங்க அம்மாவையும் அடிச்சு நொறுக்கிட்டான் இந்தப் பாவி...'

கடைசியில் போலீஸ் டேசனுக்குப் போற வளீலே வீட்டுக்கு வந்து, என் பெட்டியைத் திறந்து எனக்க துணியை எல்லாம் - அவன் தான் எடுத்துத் தந்தான். இல்லேன்னு சொல்லல்லே - குமிச்சுப் போட்டு, மண்ணெண்ணெய் விட்டுத் தீ வச்சான்... 'என் பெண்டாட்டி பங்கிக்குத் தகனம் நடந்தாச்சு' - அப்படீண்ணு சொல்லிட்டு டேசனுக்குப்போனான்.

அப்படியே தொலைஞ்சிருக்க மாட்டானா...! நாலு மாசம் களிஞ்சு ராத்திரி வந்து கதவைப் போட்டுப் 'படா படா'ண்ணு தட்டுறான்; ஆருண்ணு கேட்டா அம்மா...

'நான்தான் வாமன்'ண்ணு சொன்னான்.

'உம்... என்னத்துக்கு?'ண்ணு அம்மா கேட்டாள்.

'பங்கி இல்லையா?'ண்ணு கேட்டான்.

'இல்லியே... அவளுக்குத் தகனம்தான் நடந்தாச்சே'ண்ணு அம்மா சொன்னாள். அவன் போனாத்தானே! என்னவெல் லாமோ சொல்லிச் சமாதானப்படுத்தி மறுபடியும் சேர்ந்துட்டான். இப்போ இப்படி...!'

முன் வாசலை யாரோ தட்டும் சத்தம். பங்கி அடுப்படியில் பதுங்கிக்கொண்டாள். கமலம்மை போய்க் கதவைத் திறந்த போது நடையில் விஜயன் நிற்கிறான்.

'அம்மை இல்லையா...? அப்பா போயாச்சு...'

அந்தச் செய்தியைப் பங்கியிடம் சொல்லி, அவளை வெளியே அனுப்பி வைக்க சமையலறையை நோக்கி நடந்தாள் கமலம்மை.

03.03.1975 - ஏடு, 4/1975

# 6. பதர்

க க்கத்தில் சுருட்டி வைத்திருந்த காலி சாக்குப் பைகளின் கனத்தால் நடை தள்ளாட மேல் மூச்சு, கீழ் மூச்சு வாங்க அந்த வீட்டுக்குள் ஏறும்போது ரத்த நிற செம்பருத்திப் பூக்கள் மௌனமாய்த் தலையாட்டிக் கோபியை வரவேற்றன.

முதலில் தென்பட்ட சமையலறையைச் சுற்றிக்கொண்டு வீட்டின் முற்றத்துக்குச் செல்லும்போது பக்கவாட்டில் ஒரு சின்ன ஜன்னலுக்குள் முன் அனுமதியின்றி கடந்து சென்ற அவன் விழிகளில், தோளில் வேட்டியைப் போட்டுக்கொண்டு ஜார்ஜ் ஜட்டியைக் கட்டிக் கொண்டிருப்பதைப் போன்ற ஒரு காட்சி விழுந்து மறைந்தது போலிருந்தது.

முற்றத்திலிருந்து வராந்தாப் படிகளில் இவன் ஏறும்போது, எதிரில் நடு அறையில் உரக்கக் கூவிக் கொண்டிருந்த ரேடியோவைத் திருகிக் கொண்டிருந்த ரோஸி இவனைப் பார்த்துவிட்டு இவன் வருகையின் விருத்தாந்தத்தைத் தெரிவிக்க உள்ளே விரைந்து செல்வது தெரிந்தது.

வராந்தாவில் ஏறிக் கட்டையிலிருந்து விலகத் தெரியாது பற்றிக் கொண்டிருக்கும் உயிர் என்ற பாரத்தைப் போன்ற கோணிப் பை கட்டைக் கீழே போட்டபோது உடம்புக்கு என்னவோ சொல்லத் தெரியாத ஒரு சுகம்.

செருப்பைக் கழற்றிப் போட்டுவிட்டு, ரேஷன் கார்டு, நோ அப்ஜக்ஷன் சர்ட்டிஃபிக்கேட், கோர்ட் பீஸ் ஸ்டாம்ப் ஒட்டிய விண்ணப்பம் முதலியவை போட்டுவைத்திருந்த நீள கவரைப் பத்திரமாய் மடியில் வைத்தவாறு

சிமிண்ட் குட்டிச் சுவரில் அவன் உட்கார்ந்தான். எதிரில் கிடந்த பெஞ்சின் அடியில் கால்களுக் கடியில் முகத்தைப் புதைத்துச் சுக நித்திரை பிராபித்திருக்கும் சாம்பல் நிற நாய் அவன் கண்களில் விழுந்தது.

உள்ளேயிருந்து, எங்கோ புறப்பட்டுக் கொண்டிருந்ததால் வழக்கத்திற்கு மீறிய வெள்ளை உடையில் அன்னம்மா டீச்சர் வருவது தெரிகிறது. தன்னை இப்போது எதிர்பார்க்காத ஒரு வியப்பு அவள் முகத்தில்.

‘இப்போதான் வாறேளா?’

‘ஆமா.’

ஒரு மூன்று வயசுப் பையன் ஜார்ஜின் மகனாக இருக்க வேண்டும். இடுப்பில் அழுக்கு நிக்கர். அதைவிட அழுக்கான உடம்புடன் அந்த நாயின் பக்கத்தில் வந்து உட்கார்ந்துகொண்டு விளையாடிக் கொண்டிருந்தான்.

நாய் தூக்கம் கலைந்து இவனை ஒருதடவை வெறுப்புடன் பார்த்துவிட்டு, மறுபடியும் தலையைப் புதைத்துக் கொண்டது.

‘இண்ணைக்கு ஞாயிற்றுக்கிழமையாச்சே... உங்களுக்கு ஸ்கூல் இல்லையே... எங்கோ போகப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறீங்க போலிருக்கு...’

‘இல்லே... இவ ரோஸி. பி.எட். பாஸாகி அஞ்சு வருஷம் ஆயாச்சு. இவ்வளவு நாளா வேலைக்கு முயற்சி செஞ்சு தோற் றாச்சு. இப்போ தடிக்காரன் கோணத்திலிருந்து ஒரு சம்பந்தா லோசனை வந்திருக்கு. இந்த வீட்டை விற்றாவது அவ கல்யா ணத்தை முடிச்சிருலாமுண்ணு ஒரு எண்ணம். அதுக்காகத்தான் ஒரு ஆளைப் பார்க்கப் புறப்பட்டுக்கிட்டிருந்தோம்... பரவாயில்லே... பிறகு பாத்துக்கிறோம்...’

‘என்னா அரிசியாக்கித் தர முடியாதுண்ணு ஒரேயடியா எழுதியிருக்கிறீங்களே...’ என்று அவன் கேட்டதும், உணர்ச்சி வசப்படுகையில் எல்லாம் சம்பவிக்கும் ஒரு தலையாட்டலுடன் அன்னம்மா, ‘அக்கில்லே... எனக்கு உடம்புக்குச் சுகமில்லே. ஆள் வச்சு செய்யலாமுண்ணா இங்கே அறுப்புச் சமயத்தில் கூலிக்கு ஆள்

கிடைப்பது கஷ்டம். அதோடு இங்கே மில்லில் பவர்கட் வேறு...' என்று சொல்லிக்கொண்டிருக்கும்போதே அவன் இடைமறித்தான்.

'எல்லாம் வேணுமுன்னா செய்யலாம்... உங்களுக்கு அதுக்கெல் லாம் மனசில்லே. உங்ககிட்டெ எத்தனையோ தடவை நான் சொல்லியிருக்கேன். இது எனக்கும் என் பெண்டாட்டி பிள்ளை களுக்கும் சாப்பாட்டுக்காக நான் கொண்டு போகிற நெல்லு. அதை நீங்க கல்லும் மண்ணும் பதறுமாக அளந்தால் எங்க ரேஷன் கார்டை கேன்சல் செஞ்சு இந்தப் பாடான பாடெல்லாம் பட்டுக் கொண்டு போனால் ரெண்டு மாசத்துக்குக்கூட எங்க சாப்பாட்டுக் குத் திகையாது. அதுதான் உள்ளதையாவது உருப்படியாகக் கொண்டு போகலாமுண்ணு அரிசியாக்கித் தரச் சொன்னா, அதுக்கும் இப்படியெல்லாம் நொண்டிக் காரணங்கள்.'

அப்போது பக்கவாட்டு அறையிலிருந்து ஜார்ஜ் மெல்ல அங்கே வந்தான்.

'இப்போதான் வந்தேளா?'

'ஆமா... கொஞ்ச முந்தி வந்தேன்.

'பெர்மிட் எல்லாம் எடுத்தாச்சா?'

'இல்லை. ரேஷன் கார்டு, அது இதுவெல்லாம் கொண்டு வந்திருக்கேன்... இனிமேல்தான் எடுக்கணும்.'

'இண்ணைக்கு ஞாயிற்றுக் கிழமையாச்சே; ஆபீஸொண்ணும் இருக்காதே...'

'தெரியும்... நெல்லை அளந்து பார்ஸல் ஆபீஸில் சேர்த்து விட்டுப் போனா அந்த வேலையாவது தீருமே. இன்னொரு தடவை உங்க வீட்டுக்கு நான் அலைய வேண்டாமுண்ணு நினைச்சு வந்தேன்.'

'இந்தத் தடவை ரொம்பக் கஷ்டமாம். எல்லோரும் பேசிக்கிறாங்க... பெர்மிட் கிடைக்கணுமுண்ணா லெவி அளக்க வேண்டியிருக்கும்.'

'லெவியா? ஒரு ஏக்கருக்கு மேலிருந்தாத்தானே லெவி அளக்கணும்?'

‘அது போன தடவை... இந்தத் தடவை அம்பது சென்டுக்கு மேலிருந்தா; விளைச்சலைப்பற்றி யாருக்கும் கவலை இல்லை. நாலு மூட்டை அளந்துவிட வேண்டுமாம்... நம்ம நிலம் அம்பத்திரெண்டு சென்ட் வருமே.’

இவனுக்குத் தலையில் என்னவோ செய்தது.

இப்போது ரோஸியும் வாசலில் வந்து நின்று கொண்டாள். கல்யாணத்துக்கு முந்தியே - இப்போது இவளுக்கு முப்பது வயது இருக்காதா, இவள் முகத்தில் குடிவந்து விட்ட மூப்பு இவன் மனசை ஏனோ சங்கடப்படுத்தியது.

‘இந்தத் தடவை விளைச்சல் படு மோசம்...’ என்று அன்னம்மை தொடங்கியபோது, ‘எப்போதான் உங்களுக்கு நல்லா இருந்திருக்கு? நல்லா விளைகிறபோது நீங்க கூடுதலா எனக்குத் தருவதுண்டா? நீங்க குறச்சுத் தருகிற இந்த நெல்லை முழுவதையும் லெவியாய் அளந்து பெர்மிட் எடுத்தால், பிறகு பெர்மிட்படி கொண்டுபோக நெல்லுக்கு நான் எங்கே போவேன்? கண்ணை விற்றுச் சித்திரம் வாங்கிய கதைதான்...’ என்று அவன் சத்தம் போட்டான்.

‘இல்லை... இந்தத் தடவை முந்நூறு ரூபாய்க்கு மேல் செலவு. நல்லபடியாகத்தான் பயிர் செஞ்சோம்... நல்ல உரம் போட் டோம். பயிர் அளகா வளர்ந்து கண்ணுக்கு நிறைவா நின்றது. கடைசியில் பயிரில் பால் வந்ததும் நெட்டுப் புழு விழுந்தது. பலன் சூன்யம்... பாதி நெல்லுக்கு மேல் சாவியாயிட்டது. இது எனக்கு மட்டுமில்லே. பக்கத்து விவசாயிகள் எல்லோரும் தலையில் கை வைக்கும் நிலைமை... வேணுமுன்னா விசாரிச்சுப் பாருங்களேன்...’ என்று ரோஸியும் அவள் அம்மாவின் கட்சிக்காக வாதாடினாள்.

‘ஏன், பூச்சி மருந்து ஒன்றும் வாங்கித் தெளிக்கல்லியா?’

பயிரில் பால் வந்த பிறகு மருந்து தெளிக்கக்கூடாதுங்க... ஹூம் புடைச்ச நெல்லைக் காயப் போட்டுப் புடைக்கப் போட்டிருக் கேன்... மொத்தம் மூணு மூட்டை ரெண்டு மரைக்கால் நெல் கிடைச்சது. காயப் போட்டுப்

புடைச்ச பிறகு அளந்து பாக்கலை. மூணு கோட்டைகூட தேறுமா என்பதே சந்தேகம்... பயிர் செஞ்ச நிலத்திலிருந்து நாழி அரிசிக்குக்கூட எங்களுக்குப் பலன் கிடைக்காமல் தவிக்கிறோம். இந்த ஒரே நிலம் தவிர மற்ற எல்லா நிலங்களையும் விட்டேன். என்னால் முடிய மாட்டேங்குது. இருந்தும் இதை மட்டும் ஆள் வைச்சுத்தான் வீட்டிலே ரெண்டு நெல்லு மிதி படணுமுண்ணு ஏதோ ஆத்ம திருப்திக்காக நான் விவசாயம் செஞ்சுக்கிட்டிருக்கேன்... உம், உள்ள நிலைமையை உள்ளபடி சொல்லி விட்டேன். இனி உங்கள் விருப்பம் போல்...'

'சரி, சரி. எனக்க தரித்திரத்தில் இனி உங்க தரித்திரக் கொடுமையைக் கூடச் சொல்லி என்னை வதைக்காதீங்க. சரி அளக்கலாமே... எனக்கு நேரமாச்சு' என்று அவன் அவசரப்படுத் தியதும், 'சரி முதலாளி ரோட்டுக்குப் போயி அளக்க ஆராவது நிக்காண்ணா கூட்டிக்கிட்டு வாறேன்' என்று சொல்லிவிட்டு ஜார்ஜ் இறங்கியபோது, 'எதுக்கு வேறே ஆளு? நீ போதாதா?' என்று மடக்கினாள் ரோஸி. 'அவன் அளந்தால் சரிப்படாது' என்று அன்னம்மா சொன்னபோது, 'வீட்டிலிருந்து கள்ளக் களவில் அளந்து விக்க மட்டும் தெரியுமில்லே' என்று ரோஸி கேலி செய்ததைக்கேட்டு ஜார்ஜின் மீசை துடித்தது.

'போட்டீ நாயே. நீ அதிகம் வெளையாதே...' என்று அவன் படியில் நின்றவாறு கத்தியதும் ரோஸியின் முகத்தில் ஒரு ரௌத்திர பாவம் ஆர்பவித்தது. ஜார்ஜின் அருகில் வெறி பிடித்தவளைப்போல் ஓடி வந்து அவன் முகத்தின் நேர் கையை நீட்டி ஆட்டியவாறு, 'டேய், ராட்சஸா உனக்க இந்த மாதிரி நாயே... பேயே... பேச்செல்லாம் எங்கிட்ட வெச்சிக்காதே. உனக்க பெண்டாட்டியோடு இருக்கட்டும். உன் இம்ஸை பொறுக்காம அந்த மவராசி பிள்ளங்களையும் தூக்கிக்கிட்டு அவ அம்மை வீட்டோட போய்ச் சேர்ந்துட்டா. கட்டிலுக்கு அடியில் நெல்லை விரிச்சு நானும், அம்மையும் காவல் காத்தும் நீ திருடி விக்கலையாடா? உன்னாலே பக்கத்து வீட்டு ப்ரண்ட்ஸ்கள் முகத்திலே ஒண்ணும் முழிக்க முடியாமல் ஆயாச்சு... வீட்டிலே மறிக்குப் போட்டிருந்த தேங்காயைத் திருடிக்கிட்டுப்போய் அவங்களுக்குக் கண்ட விலைக்கு விற்றவன்தானே

நீ...' என்றெல்லாம் ரோஸி சத்தம்போடத் தொடங்கியபோது, அன்னம்மா அண்ணன் - தங்கையின் இடையில் அழுகையுடன் குறுக்கிட்டாள்.

'உங்க ரெண்டு பேருக்கும் எப்பவும் இதே வழக்கமாகிட்டது. வீட்டில் யாரு வந்திருந்தாலும் சரி, அவுங்க முன்னே வச்சும் கீரியும் பாம்புமா இப்படியா சண்டை போடுவாங்க?' என்று சொல்லிக்கொண்டிருக்கும்போதே அன்னம்மாவுக்கு இருமல் வந்துவிட்டது. அவள் நிறுத்தாமல் இருமத் தொடங்கியபோது, இவன் ஜார்ஜிடம் குறுக்கிட்டுச் சொன்னான். 'ஜார்ஜ், எனக்கு நேரம் ஆச்சு. நீ போய் யாரையாவது கூட்டிக்கிட்டு வா... போ போ' என்று அவனைப் பிடித்திழுத்து வெளியே கொண்டுபோய் விட்டு, திரும்ப வரும்போது முற்றத்தில் ஒரு மூலையில் குவிந்து குந்தியிருந்தவாறு விழிகளில் இருந்து நீர் வடிய அன்னம்மா இருமி இருமி துப்பியிருப்பது தெரிகிறது. அவள் முன் வறண்ட மண் தரையில் பரந்து கொண்டிருக்கும் செக்கச் சிவப்பைக் கண்டதும் தலை சுற்றியது.

ரோஸி அடுத்த வீட்டு வேலிக்கருகில் போய் நின்றுகொண்டு 'கோமதீ... கோமதீ... உங்க கோழி முட்டைப் போட்டுண்ணா ஒரு முட்டை தா... பிறகு பைசா தாறேன். அன்னா அம்மா மறுபடியும் ரத்தம் ரத்தமா வாந்தி எடுக்கிறா...' என்று பதட்டத்துடன் சத்தம் போட்டுச்சொல்வது கேட்கிறது.

இப்போது வேறு கூலியாளுடன் உள்ளே வந்து கொண்டிருந்த ஜார்ஜிடம் கையும் காலும் பதற ஓடிச் சென்று, 'ஜார்ஜ், உங்க அம்மா ரத்தம் ரத்தமா வாந்தி எடுக்கிறா... ஓடிப்போய் டாக்டரைக் கூட்டி வா...' என்று சொன்னதும், 'அவ சாகணும் அப்போதான் புத்தி வரும்' என்று நிதானமாகச் சொல்லிவிட்டு அவன் உள்ளே போய் ஒரு பெரிய ஓலை நார் பெட்டியில் நெல்லை அள்ளிக் கொண்டு வந்து முற்றத்தில் தட்டத் தொடங்கினான். அது ஒரு அன்றாட சம்பவம் என்ற ரீதியில் அன்னம்மாவின் பேரப் பையன், இப்போது மண்ணை அள்ளிக் கொண்டுவந்து போட்டுச் செகப்பைக் கறுப்பாக்கிக் கொண்டிருந்தான்.

ரோஸி வந்து அன்னம்மாவைக் கைத்தாங்கலாக உள்ளே கூட்டிக்கிட்டுச் சென்று, கட்டிலில் படுக்க வைப்பது தெரிகிறது.

ஜார்ஜ் கோணிப் பையின் வாயை விரித்துப் பிடித்திருக்க, அவன் கூட்டிக்கிட்டு வந்த ஆள் மரக்காலில் நெல்லை அளந்து அதில் தட்டிக் கொண்டிருந்தான். இவனுக்கு இன்னும் படபடப்பு அடங்கவில்லை. இருந்தும் நெல்லைக் கையில் எடுத்துப் பார்த்த போது காற்றுபோல் இருந்தது. கனமில்லை. இதுக்குள்ளே அரிசி இருக்குமோ என்ற சந்தேகம் வந்துவிட்டது. அதோடு சின்னச் சின்ன மண் கட்டிகள் வேறு. பதினஞ்சு மரக்கால் வைத்து மூன்று சாக்குக்கூட அந்த நெல் திகையயும் இல்லை.

‘இந்த ஊசியையும் சணல் நாரையும் யாரு எடுத்தா?’ என்று கேட்டவாறு, வராந்தா கூரை இடுக்கில் கையை விட்டு ஜார்ஜ் துழாவிக் கொண்டிருக்கும்போது மீதியிருந்த இரண்டு காலிக் கோணிப் பைகளையும் சுருட்டிக் கக்கத்தில் வைத்துக்கொண்டு, தெரு நடையில் உச்சி வெயிலில் காய்ந்தவாறு நின்று கொண்டிருந்தான் இவன்.

26.03.1975 - சதங்கை 12/1975

# 7. வீடு திரும்புதல்

து க்காராம் வீடு திரும்பிக் கொண்டிருந்தான். ஸிட்டி பஸ்ஸின் பின் விளக்கு ஒரு செம்புள்ளியாய் வெகு தூரத்தில் அந்தர்த்தான மாகிக் கொண்டிருந்தது.

ஈ, காக்கை இல்லாத விஜனமான அகலமான ரோடு. பகல் போன்ற வெளிச்சத்தை விரயம் செய்துகொண்டிருக்கும் மெர்க்குரி வேப்பர் விளக்குகள். குளிர்ந்த காற்றுடன் சரசமாடிச் சருகுகளுடன் மலர்களையும் உதிர்க்கும் மரங்கள்.

கைக்கடிகாரத்தில் மணி பதினொன்றாகி விட்டிருந்தது... பாவம் அம்மா, சாப்பிடாமல் காத்துக் கொண்டிருப்பாள். அப்பா இருண்ட தெருவை வெறித்தபடி வெளி வராந்தாவில் நின்று கொண்டிருக்கிறாரோ, இல்லை அம்மாவிடம்போய், 'உன் பிள்ளை பீஸ் வாங்காமல் டியூஷன் சொல்லிக் கொடுக்கத்தான் போயிருப்பான்' என்று தொணதொணத்துக் கொண்டிருக் கிறாரோ...

இடப் பக்கம் திரும்பும் சந்தில் திரும்பி நடந்தான். மிகுந்த இடைவெளிவிட்டு அங்கொன்றும் இங்கொன்றுமாக இந்தத் தெருவில் அழுது வடியும் சாலை விளக்குகளின் அடக்கமான வெளிச்சம் மனசுக்கு ஏனோ இதமாக இருக்கிறது.

இரு பக்கமும் இருளில் மூழ்கிக் கிடக்கும் பங்களாக்கள். மனிதர் களின் காலடிச் சுவடுகள் தெரியாத தார் ரோடு.

இன்று வீட்டில் போய் ஏறும்போது, ஏண்டா ராமா இன்னிக்கு இத்தனை நாழி? என்று அம்மா களைத்த குரலில் கேட்கும்போது, பஸ்ஸில்

ஏறுகையில் கோட்டை விட்டு விட்ட மணி பர்ஸைச் சொல்லித் தப்பித்துக் கொள்ளலாம்தான்; பர்ஸுக்குள் அப்படி அதிகம் ஒன்றும் இல்லை - ஒன்பது ரூபாயும் சில்லறையும். இருந்தும் அபகரிக்கப்பட்டு விட்டோம் என்று ஒரு ஆற்றாமை... பஸ் வந்து நின்றதும், ஓடிப்போய் புட் போர்டில் ஒரு காலும், ரோட்டில் ஒரு காலுமாய் தொற்றிக்கொண்டு மாவலியார் போகுமா என்று கண்டக்டரிடம் கேட்க, போகாது என்று அவன் சொல்லிக் கேட்டுக் கீழே இறங்கும்போது கை சட்டை ஜேபியில் துழாவ... சூன்யம்.

நல்லவேளை, கோபாலும் ஆறுமுகமும் பஸ் ஏற்றிவிட வந்திருந் தார்கள். அவர்களிடமிருந்து சில்லறை வாங்கிக்கொண்டு அடுத்த பஸ்ஸைப் பிடிக்க முடிந்தது. உம்... இதெல்லாம் காலில் வந்த இந்த வீக்கத்தால் வந்த வினை. கொஞ்சநாள் சைக்கிள்விடக் கூடாது என்று டாக்டர் தடுத்திருந்தார்.

நடக்கும்போது காலில் லேசாய் அந்த வலி தெரிகிறது. நாள்படச் சரியாகி விடும். பயப்படத் தேவையில்லை என்றுதான் டாக்டர் சொல்லியிருக்கிறார்... இருந்தும் சமீபத்தில் புற்று நோயால் கால் துண்டிக்கப்பட்டு விட்ட தன் உற்ற நண்பன் மகாதேவனை நினைச்சு மனசில் ஒரு பயம்.

பாதி தூரம் ஆகியிருக்குமா. இதோ ரிட்டயர்ட் ஜட்ஜ் ராமபத்ர மேனோனின் வீடு. வெளி கேட்டும் முற்றமும் எல்லாம் இருளில் ஆழ்ந்து கிடக்கிறது அடைந்து கிடக்கும் கண்ணாடி ஜன்னலுக் குள்ளே அரண்ட மஞ்சள் நிற வெளிச்சம் அதோடு மெல்லிய இந்தி சினிமா இசையின் இழைகள்.

போன வாரம் இந்த வழியாக இவன் நடந்து போவதைக்கண்டு நடையில் நின்ற மேனோன் ‘என்ன ராமா, உன் சைக்கிள் எங்கே?’ என்று கேட்டார். காலில் வீக்கம் என்றபோது காலில் மட்டும் தானா என்று கேட்டு விட்டு இவன் உடம்பின் மத்திய பாகத்தை அவர் விழிகள் ஊடுருவியபோது இவனுக்கு ஆச்சரியமாய்ப் போய் விட்டது. இவன் முக பாவத்திலிருந்து விஷயத்தைப் புரிந்துகொண்டு, வா என்று விட்டு

விடுவிடுவென்று அவர் உள்ளே போனார். இவனும் பின் தொடர்ந்தான். அறைக்குள் போய்க் கதவைக்கூடச் சாத்தாமல், வேட்டியை அவிழ்த்து, ‘பார்த்தாயா... இப்படி இறுக்கமாய் லங்கோட்டு கட்டிக்கணும்’ என்று மிகுந்த காரிய கௌரவத்துடன் சொன்ன நிகழ்ச்சி.

- அதை நினைத்தபோது இவனுக்கு உள்ளுக்குள்ளே மூண்ட சிரிப்பின்கூட ஒரு படபடப்பும், எப்படியோ... ஓய்வு பெற்ற பின்னரும் அவர் சந்தோஷமாகத்தான் இருக்கார்... ஆனால், தன் வீட்டில்...

மறுபடியும் மனசில் அந்தப் பழைய கனம்...

அப்பாவுக்கு இப்போ எண்பது வயசிருக்காதா? துப்பறியும் நாவல்களும் சிகரெட்டுகளுமாய் அவர் இயங்கிக் கொண்டிருந்த காலமெல்லாம் போய் விட்டன. இப்போ கை கால்களுக்கு உள்ள வலு மூளைக்கு இல்லை. குட்டி போட்ட பூனையாய் வீட்டுக் குள்ளே சுற்றிக்கொண்டிருக்கிறார். பசி வரும்போது சாப்பாட்டு மேஜை முன் ஆஜர்... ஆனால், ரெண்டு நாட்களுக்கு முந்தி, திடீரென்று வெளியில் இறங்கிப் போய்விட்டார்.

நல்லவேளை, இங்கே வந்ததும், வீட்டு நடையில் நின்று கொண்டிருந்த மேனோன் கண்டு விட்டார். ‘என்ன ஐயர்வாள், இந்த நட்டுச்சி நேரத்தில் எங்கே போறீர்?’ என்று அவர் கேட்டப்போ ‘எங்க ராமன் புதுக் கார் வாங்கியிருக்கான்; இன்னிக்கு ஆபீஸிலிருந்து ராமன் வந்து ஏறுவதுக்குள்ளே கார் மட்டும் ஓடி வந்துட்டுது. அதுதான் ராமனைத் தேடிக்கிட்டு போறேன்’ அப்படீண்ணு சொன்னாராம். கடைசியில் மேனோன்தான் என்னவெல்லாமோ சொல்லிச் சமாதானப் படுத்தித் திரும்ப அவரை வீட்டுக்குக் கூட்டிக்கிட்டு வந்துவிட்டுப் போனார்.

இன்னம் இப்படி எத்தனைநாள் அவரும் கஷ்டப்பட்டுப் பிறத்தியாரையும் கஷ்டப்படுத்தப் போறாரோ. ஆனால், சாவு என்றால் இப்பவும் அவருக்கு அசாத்திய பயம். டாக்டர் வீட்டுக்கு வந்தால், அவர்கிட்டே ஒவ்வொரு மருந்தையும் பற்றித் தொண தொணவென்று ஏதாவது கேட்டு உயிரை வாங்கி விடுவார்.

அம்மாவும் இப்போதெல்லாம் எப்போதும் படுத்த படுக்கை தான். அவர்களை நினைக்கும்போது மனசுக்குள் ஒரு ஈரக் கசிவு. ஒன்றா, ரெண்டா? எட்டு பெற்றாள். அதில் அஞ்சு புத்திரர்கள். இப்போ மற்ற நாலு பேரும் பெண்டாட்டி பிள்ளைகளோடு பங்களா, கார், ப்ரிட்ஜ் என்று குஷாலாய்க் குடும்பம் நடத்துகிறாங்க... ரெண்டாவது மகன் மட்டும்தான் இப்படி.

தனக்கும் கல்யாணமாகியிருந்தால் தன் தமையன் தம்பிமார் களைப்போல் தன் பாட்டைப் பார்த்துக்கொண்டு தானும் போயிருப்போமா? அதனால்தானா தன் கல்யாணத்துக்கு அப்பாவும் அம்மாவும் அப்படி ஒண்ணும் பெரிய சிரத்தை எடுக்கவில்லை? அப்படிச் சொல்ல முடியுமா? தன் அண்ணன் தம்பிமார்கள் எல்லோரும் கல்யாணம் செய்து கொள்ள வில்லையா? தங்கைகளின் திருமணங்கள் நடக்கவில்லையா? தனக்குத்தான் எந்தப் பெண்ணையும் பிடிக்கவில்லை. தன் சகோதரர்களைவிட, பெண்ணின் குலம், படிப்பு, உருவப் பொலிவு எல்லாவற்றிலும் தான் பிடிவாதமாய் இருந்ததுதான் காரணமோ? இல்லை, இதெல்லாம்கூட, கல்யாணம் என்கிற போதே தன் அடி மனசில் தோன்றும் அந்தப் படபடப்பை மறைக்கப் பயன்பட்ட போர்வைகளா?

எது எப்படியோ... இன்னும் ரெண்டு வருஷத்தில் சர்வீஸிலிருந்து ஓய்வு பெற்று விட வேண்டியதுதானே. அப்பா அம்மாவுக்குப் பிறகு தன்னை யார் கவனிப்பாங்க? இதென்ன அசட்டுத்தனமான சந்தேகம்? இப்போ அப்பா அம்மாவை தான் கவனிக்கிறோமா, இல்லை அவுங்க, தன்னைக் கவனிக்கிறாங்களா?

இருந்தும் அவுங்க ரெண்டு பேருக்கும் எப்போ என்ன சம்பவிக் கும் என்று சொல்ல முடியாது. இதுக்குள்ளே ஒன்றும் நேர்ந்திருக் காது என்று கூற இயலுமா? இன்றானால் இவ்வளவு நாட்களாக இல்லாது தன் வாழ்விலே முதல் முறையாகத் தன் பர்ஸ் பிக்பாக்கெட் செய்யப்பட்டது ஒரு அபசகுனமாய்... சம்பவிக்கப் போகும் எதையோ முன் கூட்டித் தெரிவிக்கும் சூசனையாய்...

சீதோஷ்ண நிலைமைக்கெல்லாம் ஈடு கொடுக்க முடியாமல் பழுதாகி மலக்கத் திறந்து கிடந்த வெளிகேட்டைத் தாண்டும் போது நேற்று வராந்தாவில் உட்கார்ந்து கோபாலுடனும் ஆறுமுகத்துடனும் தீவிரமான வேதாந்த விசாரணையில் ஈடுபட் டிருக்கையில், இப்போ, இதோ, தான் நடந்துக்கிட்டிருக்கும் இதே இடம் வழி மெல்லத் தலை உயர்த்தி அங்குமிங்கும் பார்த்து விட்டு நிதானமாய் ஊர்ந்து சென்ற பாம்பு ஞாபகம் வருகிறது.

காலைத் தரையில் ஊன்றியது எப்படியென்று தெரியவில்லை. வீட்டுப் படியில் இவன் ஏறிக் கொண்டிருந்தான். வராந்தாவில் இருளில், வெள்ளைப் பனியன், மடக்கிக் கட்டியிருக்கும் வேட்டிக்குள் நிற்கும் அப்பா.

இவனுக்கு என்னவோ போலிருந்தது.

09.04.1975 - குமுதம் 03.07.1975

# 8. மோக பங்கம்

'உ ங்க மகன்தான்... எல்லாம் சரி, நேத்தைக்கு ராத்திரி நீங்க நடந்துக்கிட்டது கொஞ்சம் கொடூரமாய் விட்டதுண்ணுதான் எனக்குத் தோணுது' என்று நான் சொல்லக் கேட்டபோது உலகன்னாவின் முகம் சிறுத்தது.

'என்ன சார்... நீங்களும் அப்படியா சொல்றீங்க... எத்தனை நாளா நான் சகிச்சுக்கிட்டிருப்பேன். மொதலில் எல்லாம் அவன் அம்மாக்காரி கிட்டெ மட்டும் மத்தாயியை மரியாதையா இருக்கச் சொல்லுண்ணு சொல்வதோடு சரி. நான் கண்டுக்காதது மாதிரி இருந்தேன். ஆனா இப்போ ரெண்டு மூணு நாளா என்னாலெ கொஞ்சமும் சகிக்க முடியாமல் ஆகிவிட்டது. ராத்திரி அவன் வீட்டுக்கு வர ரெண்டு மணி, மூணு மணி. அவன் வரட்டும் கேக்கலாமுண்டு விழிச்சுக்கிட்டிருந்து அசதியில் சித்தெ நான் கண்ணசருகிற நேரத்தில் பூனைபோல்வந்து படுத்துக்கிட்டு காலம்பரெ நான் விழிக்க முந்தி எழுந்திரிச்சுப் போயிடுவான்... இப்படி ஊரைச் சுற்றிக்கிட்டிருந்தா இவன் படிக்க வேண்டிய பாடங்களை அவனுக்குப் பதில் யாரு படிப்பா? அதைத் தட்டிக் கேக்காமெ அப்படியே அவன் போக்குக்கு நான் விட்டிரணு முண்ணா சார் சொல்லுறீங்க?'

கோபத்தில் அவர் வார்த்தைகள் படபடத்தன. மேற்கொண்டு நான் ஏதாவது சொன்னால் மேலதிகாரி என்று ஒன்றும் பார்க்காமல் என்மீதும் அவர் பாய்ந்துவிடலாம் என்று நான் அவரையே பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தேன்.

‘இந்தக் காலத்தில் படிச்சுப் பாஸானாகூட பிழைப்பது கஷ்டம். எங்கே பார்த்தாலும் போட்டியும் பொறாமையும்தான். அவன் கூடப் பொறுப்பில்லாமல் இவன் ஊரைச் சுற்றினால்?’

‘இப்போ அப்படி நல்லா படிச்சுப் பாஸானால்கூட என்னா கிடைச்சு விடப் போவுது?’

‘சார்... அப்படிச் சொல்லப்படாது... நல்ல முறையில் படிச்சுப் பாஸானவங்க எல்லோரும் ஒஹோண்ணு இல்லாவிட்டாலும் எங்கேயாவதுபோய் ஏதாவது ஒரு வேலையில் தொக்கிக் கொண்டு சுமாராகவாவது வாழத்தான் செய்யுறோம். அதுக்கு மனமில்லாம சோம்பேறியா இப்படி ஃப்ரஸ்ட்ரேஷன் பெர்வர் ஷன் என்றெல்லாம் சொல்லிக்கிட்டு காட்டுமிராண்டியைப் போல் மயிரை வளர்த்திக்கொண்டு ஊரை மேய்கிறதா!’

கான்டீன் பையன் டீ கோப்பைகளைக் கொண்டுவந்து மேஜை மீது வைத்துவிட்டுப் போனான். நான் டீயைக் கையில் எடுத்தேன். அவரும் கையிலெடுத்து ஒரு மிடக்கு உறிஞ்சிக் குடித்தார். இப்போது அவர் முகத்தில் ஆத்திரம் சிறிது தணிந்தது மாதிரித் தோன்றியது.

கோப்பையை மேஜைமீது வைத்துவிட்டுக் கண்ணாடியைக் கழற்றிக் கைக்குட்டையால் முகத்தை அழுத்தித் துடைத்துக் கொண்டார்.

நான் டீயைச் சிறிது சிறிதாய் உறிஞ்சியபடி அவரைக் கவனித்துக் கொண்டிருந்தேன். இத்தனை வயசான பிறகும், நித்தம் செய்யும் க்ஷவரத்தால் ரோஜாப்பூ நிறத்தில் மொழுமொழுவென்றிருக்கும் முகம். நரை விழுந்திருந்தும் எண்ணெய் தேய்த்துப் படிய வாரப்பட்டிருக்கும் கிராப். கடும் நீல நிறத்தில் அகலமான குறுக்குக் கோடுகள் போட்டிருக்கும் ஸ்லாக் சட்டை. தொளதொளண்ணு மின்னும் டெரிகாட்டன் கால் சராய், தோல் அலர்ஜி காரணமாக காலில் போட்டிருக்கும் கான்வாஸ் ஷஷூ.

‘எங்க அப்பா சாகிறப்போ எனக்குப் பத்து வயசு. நாங்க மூணு பேரில் நான்தான் மூத்தவன். அடுத்த வருஷம் எங்க அம்மாவின் அப்பாவும்

அம்மாவும், அதுதான் எங்க தாத்தாவும் பாட்டியும் எங்க அம்மாவுக்கு இன்னொரு கல்யாணம் செஞ்சு வச்சாங்க... அதிலெ எட்டு பேருங்க... அவரும் பாரிச வாயுப் பிடிச்சுப் படுத்த படுக்கை ஆயிட்டாரு. என் அம்மா வயித்தில் எனக்குப் பிறகு பொறந்தவங்க எல்லோரும் எனக்கு ஒண்ணு போலத்தான். எல்லோரையும் படிக்க வச்சேன். பெட்டைகளைப் படிக்க வச்சேன். பெட்டைகளை நல்ல இடத்தில் கெட்டிக் கொடுத்தேன்... இண்ணைக்கு அந்த ஈசோ அருளால் அப்படி ஒண்ணும் பெரிய கஷ்டம் இல்லாமல் வண்டி ஓடுது. பதினாறு வயதில், ரெண்டு வயசு கூட்டிவச்சு சர்வீஸில் வெறும் லைன் மேனாகப் புகுந்தவன் நான். ரிட்டயராக இன்னும் ரெண்டு வருடம்கூட இல்லே. இந்த முப்பத்தியஞ்சு வருஷ சர்வீஸில் வீட்டிலும் வெளியிலும் எதையெல்லாமோ நான் பார்த்து விட்டேன்... அனுபவிச்சுட்டேன். எனக்கெல்லாம் இல்லாத ஃப்ரஸ்ட்ரேஷனும், பெர்வர்ஷனுமா, சமயா சமயத்துக்குக் கையில் கட்டியிருக்கிற கடிகாரத்தில் மணியைப் பார்த்துவிட்டு சாப்பாட்டு மேஜைக்கு முன்னால் தண்டச் சாப்பாட்டுக்கு ஆஜராகும் இந்தப் பயல்களுக்கு?'

பியூன் சங்கரன் 'அர்ஜண்ட்' ப்ளாக் செருகியிருந்த ஒரு தடியான ஃபைலைக் கொண்டுவந்து வைத்துவிட்டுச் சென்றான். அதைக் கையில் எடுத்து நான் புரட்டியவாறு 'என்னதான் ஆனாலும் வயசு வந்த பையன் அவன் கிட்டெபோய் இப்ப முரட்டுத்தனமாய் நடந்த உங்களை அவன் எப்படி சும்மா விட்டுட்டாண்ணுதான் எனக்கு ஆச்சரியமாக இருந்தது' என்று சொன்னபோது அவர் 'கடகட'வென்று சிரித்தார்.

'சார்... எனக்கு ரிட்டயராக இன்னும் ரெண்டு வருஷம்கூட இல்லை என்பதெல்லாம் சரிதான். ஆனால், என் ஆரோக்கியமும், மனோ வீரியமும் அப்படி ஒண்ணும் அவன்கிட்டே தோற்றுப் போய் விடுகிற அளவுக்கு மோசமாயிடல்லே...'

பெல்லை அழுத்திச் சங்கரனை அழைத்து ஃபைலைக் கொடுத்தனுப்பி விட்டு, 'ஆமா, ஸலூனுக்குப் போன உங்க மகன் மத்தாயி திரும்ப

வராமல் கோவிச்சுக்கிட்டு அப்படியே போய் விட்டிருந்தா நமக்குத்தானே கஷ்டம்...!' என்றேன்.

இப்போது அவர் முகம் மறுபடியும் சிறுத்தது. 'என்ன சார்... திரும்பி வராமல் வேறு வழி? இந்தக் காலத்தில் கூட்டாளிகளும் சேக்காளிகளும் எல்லாம் சரிதான். ஆனா தவிச்ச வாய்க்கு ஒருத்தனாவது பச்சைத் தண்ணிகூட ஊத்துவானா? சமயம் கிடைச்சால் எல்லாவனும் சீசறுக்க யூ டு ப்ரூட்டஸ்கள்தான். ஆமா... முன்னே நிக்கிறவனை மிதிச்சுத் தள்ளிக்கிட்டு மேலே மேலே போவணுமுண்ணுதான் ஒவ்வொருத்தனுக்கும் வெறி. தான் வாழ்ந்தால் மட்டும் போதாது. பிறர் தப்பித் தவறிக்கூட வாழ்ந்து விடக்கூடாது. அப்படி ஒரு சித்தாந்தம். ஸ்ட்ரகில் பார் எக்ஸிஸ்ட்டன்ஸோ என்ன எளவோ! உம் இங்கே வீட்டிலே செரிக்க சாப்பாடு கிடைச்சுக்கிட்டிருந்தா இதெல்லாம் எங்க தெரியும்? நாலு நாள் வயிற்றில் பாச்சை பிராண்டினால் மோக பங்கத்தை எல்லாம் மூட்டைகட்டி வச்சுவிட்டு மூட்டை தூக்கும்போது எல்லாவனுக்கும் இதெல்லாம் தெரிய வரும்.'

'உலகன்னான! நான் சொல்றேன்ண்ணு நீங்க கோவிச்சுக்கக் கூடாது; பத்து வருஷங்களுக்கு முந்தி நீங்க போட்டுக் கொண்டிருந்த மாதிரி வெள்ளை, லைட் கலர் சட்டையா இப்போ போட்டுக்கிட்டிருக்கிறீங்க?'

'என்ன சார்... இப்படிக் கேக்கிறீங்க... என் தம்பி மகன் வர்கீஸ் அவன் இப்போ ஸ்டேட்ஸில் வேலையாக இருக்கிறான். அவன் அங்கிருந்து அனுப்பி வைச்ச சட்டை இது. அதுதான் போட்டிருக் கிட்டிருக்கேன். அதைப் போலவா இந்தக் கண்றாவிகள்.'

'சரி சரி இதுளப்படி நடந்தது?'

'நேற்றைக்கு ராத்திரி எத்தனை மணி ஆனாலும் ரெண்டிலெ ஒண்ணு பார்த்துடறதுண்ணு மேரிக் குட்டியிடம் சொல்லி, நல்ல டிக்காஷன் போட்டு ரெண்டு கப் சாயா குடிச்சு விட்டு, கொட்டு கொட்டுண்ணு விழிச்சுக்கிட்டுக் காத்திருந்தேன். ரெண்டரை மணி கழிஞ்சிருக்கும். நான் உறங்கி விட்டதாக நினைச்சுக்கிட்டு மெல்லப் பூனைபோல வந்து கேட்டைத் திறந்துகொண்டு மத்தாயி உள்ளே வந்தான் பொசுக்குண்ணு

அள்ளிப் புடிச்சேன். தடிக் களுதே இவ்வளவு நேரம் எங்கேடா போயிருந்தே, ராஸ்கல்? அப்படீண்ணு கேட்டுக் கன்னத்தில் ரெண்டு போட்டேன்... இப்பவும் கை வலிக்குது' என்று விரலைத் தடவிவிட்டு, மேலே அவர் தொடர்ந்தார்.

'பிடிச்சிழுத்துக்கிட்டு வராந்தாவில் ஏறித் தயாரா வச்சிருந்த கத்தரிக் கோலை எடுத்து, 'படுவா ஜூடாஸ் மாதிரி ஹிப்பி வேஷமாடா போடுறே...' அப்படீண்ணு சொல்லி அவன் தலையிலும் முகத்திலும் எல்லாம் கரடி மாதிரி மதமதண்ணு வளர்ந்து கிடந்த முடியை இங்கேயும் அங்கேயுமா தாறுமாறா, கோணல் மாணலா சிரைத்தேன். பிறகு கையிலெ ரெண்டு ரூபாயைக் கொடுத்து, போடா, போய் முகமெல்லாம் வழிச்சு தலையில் கிராப் வச்சுக்கிட்டு வீட்டுக்குள்ளே வந்தா போதுமுண்ணு ஒரு கெல்தா கொடுத்து அனுப்பினேன்... பிறகு திரும்ப வந்தபிறகுதான் எனக்கு அவன் முகத்தையே பார்க்க முடியுது...'

உணர்ச்சி வசப்பட்டு உலகன்னானுக்கு மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கியது. டெலிபோன் அடித்தது. சூப்பரண்டிங் எஞ்சினியர் குரல்: 'அந்த எமர்ஜன்ஸி ஃபுட் புரொடக்ஷன் ஃபைலை எடுத்துக்கிட்டு வா...'

அந்த ஃபைலையும் எடுத்துக்கிட்டு மாடிப் படியில் விரைந்து ஏறிக் கொண்டிருக்கும்போது மத்தாயியை நினைத்து ஏனோ என் மனசுக்குள் ஒரு கசிவு... என்னை அறியாமல் என் கை என் தலையையும் முகத்தையும் வருடிக் கொண்டது.

06.07.1975 - வஞ்சி நாடு 8/1975

# 9. காவல்

இ ன்னதென்று சொல்லத் தெரியாத ஒரு அவஸ்தை... எனக்கு மூச்சுத் திணறியது.

என் தலைமாட்டில் குனிந்து என்னையே முறைத்துப் பார்த்துக் கொண்டிருப்பது... குதிரைபோல் மதமதவென்று வளர்ந்திருக் கும் கன்னங்கரிய, கொழுத்த ஒரு நாயா...? அதன் மூச்சுக் காற்று அக்னி ஊற்றாய் என் உதட்டில் உணர்வதுபோல்...

திடுக்கிட்டு நான் கண் விழிக்கிறேன்...

அறைக்குள் விடிவிளக்கின் அடியில் சிறைப்பட்டுக் கிடக்கும் மங்கிய நீல வெளிச்சம்... மெல்லக் கிறங்கிக் கொண்டிருக்கும் ஸீலிங் ஃபேனில் என் உடலத்தைப்போல் சிலிர்த்துக் கொண்டி ருக்கும் வெள்ளைக் கொசு வலை. பச்சிலையின் நரம்பாய் என்னில் ஊடாடிக் கிடக்கும் அவர்...

செவிப்பறையில் நாயின் வெண்கலக் குரைப்பொலி...

வெடவெடவென்று என் தேகம் நடுங்கியது...

நாய்... நாய்... என்ற சொற்கள் என் தொண்டையை விட்டு வெளியே வர முடியாது திக்கித் திணறிக் கொண்டிருந்தன.

என் காதில் குவியும் அவர் உதடுகள்... 'ஸ்வப்பனா'...

என் பிடி மேலும் இறுகியது... என் பிடரியில், மார்பிடுக்கில் அரும்பி நிற்கும் வியர்வையின் ஈரக் கசிவை அவர் உணர்ந்திருக்க வேண்டும்.

'என்னடீ இது சின்னக் குழந்தை போல்...! உங்ககிட்டே எத்தனை தடவை சொல்லி விட்டேன். நாய்மீதுள்ள இந்தப் பயத்தை

விட்டொழிண்ணு !...'

அவரை மேலே நான் பேச விடவில்லை. வெளியில் கேட்டுக் கொண்டிருக்கும் குரைப்பின் பக்கப் பாட்டாய் இங்கே இவர் குரலின் கரகரப்பு என்னை மேலும் பயமுறுத்தியது.

'ஐயோ சித்தெ பேசாமல் இருங்களேன்...'

அவர் வாயைப் பொத்திய என் கரத்தை அவர் தன் நெஞ்சின்மீது எடுத்து வைத்துக்கொண்டார். விரல்களை அவருக்கே உரித்தான பாணியில் அழுத்தி நீவி விடும்போது, வழக்கம்போல் என் மென்மை உணர்வுகள் துயிலெழவில்லை.

ஜன்னலில் தெரியும் கறுத்த வானம் முழுவதும் பரந்து கிடக்கும் நாய் முகம்... வெறி நாயாய்த் தென்னை மர உச்சிகளில் பாய்ந்து நடக்கும் காற்று...

வெளியில் விட்டுவிட்டுக் கேட்டுக்கொண்டிருக்கும் குரைப் பொலியிலிருந்த சிரத்தையைப் பிய்த்தெடுக்க, வறண்ட மண்ணில் விழுந்த மழைத் துளியாய் அவரிடம் அமிழ்ந்து தூக்கத்தை வரவழைக்க நான் முயற்சிக்கிறேன். கழுதை புரண்ட களமாய், தாறுமாறாய், கோர்வையற்ற நினைவுகள்.

ஐந்தாறு ஆண்டுகளுக்கு முன் இந்த வீட்டுக்குப் புதுக் குடித்தனம் வந்த நாள் நடு இரவில் அடுத்த வீட்டு விஸ்வநாதனின் நாயின் விடாத குரைப்பொலியில், பிரளய காலத் துரும்பாய் என் நெஞ்சுப் பறவை இப்படித்தான் படபடவென்று சிறகடித்தபோது காரணம் கேட்டு அவரிடம் என் இதயத்தைத் துகிலுரித்துக் காட்டினேன்.

எனக்கு வயசு எத்தனை என்று சரியாக ஞாபகம் இல்லை. மூன்றோ, நான்கோ இருக்கலாம். அப்போது ஒருநாள், அப்பா அம்மாகூடப் பாட்டி வீட்டுக்குப் போயிருக்கிறேன். பாட்டி வீட்டுக் கொல்லையில் அந்தி மந்தாரைச் செடியில் பூத்துக் கிடக்கும் ஊதா நிறப் பூக்கள் என்றால் எனக்குக் கொள்ளை ஆசை. அதையே பார்த்துக்கொண்டு சமையலறையின் பின் பக்க வாசல் நடையில் நிற்கும்போது பாட்டி பால்

தம்ளருடன் வந்தாள். 'என்ன ஸ்வப்பனா... சமர்த்தில்லையோ... இந்தப் பாலைக் குடிச்சுடு' என்று சொல்லி என் கையில் பால் தம்ளரைத் தந்து விட்டுச் சமையலறைக்குள் சென்றாள். அப்போதுதான் அந்தி மந்தாரைச் செடியின் பக்கத்தில் சோர்ந்து மல்லாந்து கிடக்கும் கன்னங்கரிய ஒரு சொறி நாயும், அதன்மீது விழுந்து ஆக்ரோஷத்துடன் பால் குடித்துக்கொண்டிருக்கும் இத்துனூண்டு இருக்கும் மூன்று நான்கு குட்டிகளும் என் கண்ணில் படுகின்றன. வாசல் படியிலிருந்து இறங்கி ஓரிரு அடி முன்னால் வைத்து அங்கேயே பார்த்துக்கொண்டு நின்றேன். ஒரு நாய்க்குட்டி அதன் நிறமும் கறுப்புதான். என்னைக் கண்டுவிட்டு குடுகுடுண்ணு என்னை நோக்கி ஓடி வந்தது. கொஞ்சம் பாலைக் கீழே தரையில் ஊற்றினேன். அது ஆவலுடன் நக்கிக் கொண்டிருக்கும்போது, மற்ற நாய்க் குட்டிகளும் ஓடிவந்து என்னைச் சூழ்ந்து கொண்டன. குட்டிகள் ஆவலுடன் என் முழங்காலின்மீது தம் கால்களைத் தூக்கிவைத்து என் மீது தாவி ஏற எத்தனித்தபோது, நான் பயந்துபோய், 'ஆ' என்று கத்திக்கொண்டே கையில் இருந்த பால் தம்ளரை அவைமீது வீசியெறிந்துவிட்டு, உள்ளே ஓடுகிறேன். என் முதுகின் பின்னால் பரிதாபமான கதறல், இடைவிடாமல் கேட்டு ஓய்கிறது. பிறகு தெரிந்தது; அந்தக் கறுத்த நாய்க் குட்டி செத்துப் போயிட்டதுண்ணு! அந்த அந்தி மந்தாரைச் செடியின் பக்கத்திலேயே ஒரு குழி தோண்டி முனியன் அதைப் புதைப்பதைப் பார்த்தவாறு நிற்கும்போதே என் அகத்தில் இன்னதென்ற சொல்லத் தெரியாத இந்த அவஸ்தை தொடங்கி விட்டிருந்தது. பிறகு என்னைக் காணும் போதெல் லாம் அந்த அம்மா நாயின் முகத்தில் தெரியும் ஆக்ரோஷம்... அப்பப்பா...

வெளியில் ராக விஸ்தாரத்தோடு நாயின் ஊளை... மறுபடியும்!

'நீ இன்னும் தூங்கலையா ஸ்வப்பனா? இத்தனைக்குப் பயப்பட நாயிடம் என்ன இருக்கு?'

பயம் தாங்கும் என் இதயத்தை அவரிடம் கரைத்துவிட நான் வெறி கொண்டேன்.

பிறகு உயர்நிலைப் பள்ளியில் படித்துக்கொண்டிருக்கும்போது, ஒருநாள் மத்தியானம் சாப்பிட, வேகாத வெயிலில் புத்தகக் கட்டு டன் நான் வீட்டுக்கு விரைந்து கொண்டிருக்கும்போது... வீதியில் ஒன்றுக்குள் ஒன்றாய் முடிச்சிறுகி விலகத் தெரியாது, தெருப் பையன்களின் கல்லெறிதலில் மிரண்டு முன்னும் பின்னும் ஓட முடியாமல் தவிக்கும் இரண்டு நாய்கள்... அவைகளின் கண்களில் எரியும் அந்த ரௌத்திர பாவம்...

எனக்கு மயிர்க் கூச்செறிந்தது.

ஒரு அருவருப்பு...

இந்தக் கட்டத்தில் நான் ஏன் அந்த நாய் ஜோடியை நினைக்க வேண்டும்... நாய்க்கும் நரனுக்கும் என்ன வித்தியாசம்? இப்போது அவருக்கு மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கியது... எனக்கு அவர்மீது வெறுப்பாய் வந்தது... அவரிடமிருந்து உதறிக்கொண்டு புரண்டு படுத்தேன்.

வெளியில் குரைப்பொலி இன்னும் நின்றபாடில்லை. ஒரு வேளை இதுக்கும் வெறி பிடித்து விட்டதோ?

என் கல்லூரித் தோழி எமிலி.

அவள் வீட்டில் நின்ற அந்தச் சின்ன நாய்க் குட்டி, உடம்பு முழுவதும் கறுகறுவென்று அடர்த்தியாய் ரோமம் வளர்ந்து தொங்கும் அழகான கறுத்த சடை நாய். எப்போ பார்த்தாலும் அவள் மடியில் விளையாடிக் கொண்டிருக்கும். ஒருநாள் அது அவளைக் கடித்து விட்டது. குட்டி நாய்தானே என்று யாரும் அதை அப்படிப் பாராட்டவில்லை. சில நாட்களில் அது நாக்கைத் தொங்கப் போட்டுக்கொண்டு கதறிக் கதறிச் செத்துப்போய் விட்டபோதுதான் தெரிந்தது, அதற்கு வெறி பிடித்திருந்தது என்று! ஆனால், இதற்குள் காரியம் மிஞ்சி விட்டது. வாயிலிருந்து நுரை ததும்பி வழிய, நாக்கை வெளியே நீட்டி, நாயைப்போல் ஊளையிட்டு எமிலி உயிர்விட்ட அந்தப் பயங்கரக் காட்சி!...

எனக்கு மீண்டும் வியர்த்துக் கொட்டியது. படுக்கை முள்ளா கியது. தொண்டக்குள் ஒரு வறட்சி... மெல்ல எழுந்தேன்.

‘இதென்ன ஸ்வப்பனா... இப்படி ராத்திரி பூரா தூங்காமல் பயந்து சாகிறே? சுல்தானை வாங்கினதே உன் பயம் தீரட்டுமுண்ணு தானே... நாள் செல்லச் செல்ல உன் பயம் கூடுவதல்லாமல் குறையக் காணோமே...’

ஆமாம், என் பயத்தின் காரணத்தை இவரிடம் மனம் திறந்து சொன்ன பிறகுதான், விஸ்வநாதனுடைய நாயின் குட்டியான சுல்தானை இங்கே இவர் கொண்டுவந்தார். பாட்டி வீட்டு அந்தி மந்தாரைச் செடி பக்கத்துப் புதை குழியில் இருந்து உயிர் பெற்று எழுந்து வந்ததைப்போல் அது எனக்குத் தோற்றமளித்தது. நான் பயந்து விரைந்தேன். ஆனால், அவர் விடவில்லை. ‘நாய் மீதுள்ள உன் பயம் தெளிய இதுதான் வழி. சுல்தான்கூடப் பழகப் பழக இந்த நடுக்கம் எல்லாம் பறந்து போயிடும்.’

‘ஐயோ... பாம்பின்மீது பயமுண்ணு அதைப் பிடிச்சு என் மடியில் கட்டுவீங்களா? இதைக் கொண்டுபோய்த் திரும்பக் கொடுத்து விட்டு வாங்களேன்’ நான் முறையிட்டேன்.

மற்ற எந்தக் காரியத்திலும் என் பேச்சைக் கேட்கும் அவர், இந்த நாய் விஷயத்தில் மட்டும் ஏன் இவ்வளவு கண்டிப்பாக இருக்கி றார் என்பதுதான் எனக்கு இன்னும் புரியவில்லை... ஒருவேளை அப்படியும் இருக்குமோ...!

நான் மெல்ல எழுந்து சென்று பிளாஸ்கிலிருந்து வென்னீரை ஊற்றிக் குடித்தேன். ஃபேனின் ரெகுலேட்டரை முழு வேகத்திற் குத் திருகினேன். மேஜை மீதிருந்த டைம்பீஸின் முள் இரண்டை நெருங்கிக் கொண்டிருந்தது.

‘எனக்கு இப்போ சந்தேகம். நீங்க இந்த சுல்தானை விடாமல் இங்கேயே வச்சுட்டிருக்கிறது என் பயத்தை ஒழிக்கவா? இல்லை, உங்களை அப்பாவாக்க முடியாத என் இயலாமையைச் சுட்டிக் காட்டவா?’

அவர் படுக்கையிலிருந்து எழுந்து உட்கார்ந்தார்.

'அதுக்கு நீயா காரணம்? காரணம் தெரிஞ்சிருந்தும் எதுக்கு இப்படி குத்திப் பேசணும்?'

வெளியில் சுல்தானின் குரைப்பு இப்போது வீட்டையே குலுக் கியது. நான் மறுபடியும் அவரிடமே ஓடிச் செல்கிறேன்.

'யாரோ வந்திருக்கிறாப்போல இருக்குது. அதுதான் சுல்தான் இப்படி விடாமல் குரைக்கிறான். விடு, போய்ப்பார்த்துவிட்டு வறேன்...' என்று அவர் எழுந்திருக்க முயன்றபோது, 'வேண்டாம்... என்னை விட்டுவிட்டு நீங்க இப்போ எங்கேயும் போக வேண்டாம். உங்களை நான் விட மாட்டேன்' என்று அவரை நான் கட்டிக்கொண்டேன்.

அவர் திமிறினார்.

'பார்க்க வெறும் கீரைத் தண்டா இருக்கிறே... உனக்கு இத்தனைக்குப் பலமா? உம்... விடு... ஸ்வப்பனா... எனக்கு மூச்சுத் திணறுகிறது. வெளியில் கார் ஹாரன் கேட்டது போலிருந்தது. கேட்டையும் யாரோ தட்டுகிற....'

'விடு போய்ப் பார்த்துவிட்டு வந்துவிடுகிறேன்.'

'என்னைக் காவல் காக்கத்தானே இந்தச் சனியனை இங்கே வளர்க்கிறீங்க?'

கோபத்தில் பற்களை நறநறவென்று கடித்தவாறு தன்னிலிருந்து என்னைப் பிய்த்து மெத்தையில் தள்ளிவிட்டு அறை லைட்டைப் போட்டார். பிறகு அறைக் கதவைத் திறக்கும்போது, 'கேட்டைத் திறப்பதெல்லாம் சரி, சுல்தானைக் கட்டிப் போட்டுவிட்டுத் திறங்கோ... அன்னிக்கு எங்க அண்ணாகூட வந்த டாக்டரைக் கடிச்சது ஞாபகம் இருக்கட்டும்...' என்றேன் நான்.

'சரி... சரி. அதெல்லாம் நான் பார்த்துக்கிறேன்... அபசகுனமாய் நீ ஒண்ணும் சொல்ல வேணாம்' அறைக் கதவைத் திறந்து கொண்டு வெளியில் சென்றார் அவர். இரவின் ஈர மடியில் இத்தனை நேரம் இயங்கிக் கொண்டிருந்த குளிர்ந்த காற்று அறைக்குள் ஆத்திரத்துடன் ஓடி வந்தது.

நான் எச்சரித்ததா குற்றம்! ராத்திரிதான் சுல்தானை அவிழ்த்து விடுவார்... பகல் நேரம் முழுவதும் சங்கிலியால் கட்டித்தான் போட்டிருப்பார். இங்கே வரும்போது சின்னஞ்சிறு குட்டியாக இருந்த சுல்தான், இப்போது இவர் இடைவிடாத சீராட்டலாலும் பாராட்டலாலும் அசல் குதிரைக் குட்டி மாதிரி தளதளண்ணு வளர்ந்து விட்டிருக்கிறது. போன மாதம் ஒருநாள் என் அண்ணா சமீபத்தில் வெளி நாட்டுக்குப்போய் மேல் படிப்பை முடித்து விட்டு வந்த டாக்டர் நாராயணனை - இவர் ஒரு ஸ்பெஷலிஸ்டாம், நல்ல கைராசியுள்ளவராம். என் அண்ணாவின் நண்பர், கூட்டிக்கிட்டு வந்தார். காரைத் தெருவில் நிறுத்திவிட்டு, கேட்டைத் திறந்து கொண்டு முற்றத்தில் பாதிதூரம்தான் இரண்டு பேரும் வந்திருப் பார்கள். குரைத்தவாறு குதித்துக்கொண்டிருந்த சுல்தான் கட்டிப் போட்டிருந்த இரும்புச் சங்கிலியை அறுத்துக்கொண்டு ஒரே தாவல்; டாக்டரை மிரட்டி எடுத்து விட்டது. பாவம், குய்யோ முறையோண்ணு குற்றுயிரும் குலையுயிருமாக அவர் ஓடின ஓட்டம்... 'ஒண்ணு இந்த நாய்; இல்லாட்டி நான்' என்று சொல்லி விட்டு அன்று இந்த வீட்டை விட்டு இறங்கிப்போன என் அண்ணா, அதன் பிறகு இந்தப் பக்கம் வரவே இல்லை. அண்ணா மட்டுமா, இந்தச் சம்பவத்திற்குப் பிறகு என் பந்து ஜனங்கள் யாருமே இந்த வீட்டுப் படியை மிதிக்கவில்லை.

'வேண்டாம் இந்தச் சனியன்! இது வீட்டில் இருந்தால் நமக்கு நல்ல கதி வராது... மலடி பட்டத்தைக்கூட நான் ஏத்துக்குறேன். ஆனால், இப்படி நம்ம மனுஷாள் எல்லாம் இந்த நாயையும் நம்மையும் சேர்த்துப் பேசற பேச்சை என்னால் தாங்க முடியலே...'

'நம்ம மனுஷாளை விட இந்த நாய்க்கு நன்றியுணர்ச்சி உண்டு.' இப்படி ஏதாவது சொல்லி அவர் சுல்தானுடன் கொஞ்சுவதோடு சரி. இந்த விஷயத்தில் வழக்கம்போல் என் வார்த்தைக்குச் செவி சாய்க்கவே இல்லை.

நான் படுக்கையிலிருந்து எழுந்தேன். அவர் உள்ளே வந்தார். கூட ஒரு சிறுவன். இது பாபு அல்லவா?

‘நம்ம விஸ்வநாதனின் மாமனார் இறந்து போனாராம். தந்தி வந்திருக்குதாம். அதுதான் அவுங்க ரெண்டு பேரும் போறாங் களாம்... இப்போ குழந்தையைக் கூட அங்கே கூட்டிக்கிட்டுப் போனால் பயப்படுவான், ஈமச் சடங்கெல்லாம் முடிஞ்ச பிறகு, நாளை வந்து கூட்டிக்கிட்டு போகிறோமுண்ணு இவனை விட்டு விட்டுப் போயிட்டாங்க...’ என்றார் அவர்.

பாபுவுக்கு நாலு வயசுதான் இருக்கும். அவனைக் கண்டதும் எனக்கு ஒரு புத்துணர்வு வந்ததுபோல் இருந்தது.

‘பாபு... வாடா... தூக்கக் கலக்கத்திலும் சிணுங்கிக் கொண்டி ருந்த அவனைத் தூக்கிப் படுக்கையில் கிடத்தி விட்டுப் பக்கத்தில் நானும் படுத்தேன். அவர் அடுத்த அறைக்குச் சென்று படுத்தார்.

மணி மூன்றாகிக் கொண்டிருக்கிறது... இன்றைக்கு இவ்வளவு நேரத்தில் ஒரு நொடிக்கூட தூங்கியிருப்பேனா? என் இமைகள் கனத்தன. சுல்தானின் குரைப்பும் இப்போது ஓய்ந்து விட்டிருக்கிறது. பாபுவை அணைத்துக்கொண்டு அப்படியே கண்ணயர்ந்தேன்.

எவ்வளவு நேரம் தூங்கினேனோ தெரியாது... வீல் என்று ஒரு கதறல். அதோடு என்னவோ விழுவதுபோல் ஒரு சத்தம். கண்களைத் திறந்தபோது ஜன்னல் வழி அறைக்குள் பாயும் வெயில். என் பக்கத்தில் பாபு இல்லை. சாடி எழுந்தேன். அடுத்த அறையில் அவர் இல்லை. வழக்கம்போல் மார்னிங் வாக் போய் விட்டாரா... கதவு திறந்து கிடக்கிறது. ‘பாபூ’... என்று கத்தியவாறு நான் வராந்தாவுக்கு விரைந்து வந்தபோது சுல்தான் முற்றத்திலிருந்து ஓடி என்னருகில் வருகிறது... அதன் வாயிலிருந்து வடியும் செக்கச் சிவந்த ரத்தம்... கருத்த மயிர்... முற்றத்துத் தரையில் கிடந்து துடித்துக் கொண்டிருக்கும் பாபுவின் பிடரி மயிருடன் சதை பிய்த்தெடுக்கப்பட்டிருப்பது தெரிகிறது...

எனக்கு மயக்கம் வந்துகொண்டிருந்தது.

20.07.1975 - குமுதம் 21.08.1975

# 10. விருந்து

வீ ட்டின் முன் தெருவில் சின்னச் சின்னக் குழுக்களாய் நின்று பேசிக் கொண்டிருப்பவர்கள் தன்னை வினோதமாய்ப் பார்ப்பதாய் இவனுக்குத் தோன்றியது. படியேறி அந்த வீட்டுக்குள் நுழையும்போது, முன்னறையில் தன் மாமனாரின் கடையில் வேலை பார்க்கும் கசங்கிய உடை தரித்த சில தொழிலாளர்கள், சுமை தூக்கும் கூலிகள், பிறகு உஞ்ச விருத்திக்கு ஏதாவது கிடைக்காதா என்று குழிந்த விரிந்த விழிகளுக்குள் ஏக்கத்தின் நிழலைச் சுமந்துகொண்டு, அடிக்கடி உள்ளே எட்டிப் பார்த்து நிற்கும் சிலர்.

வீட்டு மாப்பிள்ளை தன்னை வாவென்று யாரும் சொல்லாதிருந் தும், திறந்து கிடக்கும் வீட்டுக்குள் நுழையும் நாயாய் எப்படி மேலும் உள்ளே நுழைவது என்ற ஒரு ஆதங்கம் உள்ளுக்குள்ளே குடைந்தாலும், அந்நியர்களை உபசரிப்பதில் ஈடுபட்டிருக்கலாம். நான்தான் உரிமையுள்ளவனாயிற்றே என்று தனக்குத்தானே சமாதானம் சொல்லிச் சமாளித்து, செருப்பை அங்கே ஒரு மூலையில் கழற்றிப் போட்டுவிட்டு, நடு முற்றத்தில் இறங்கி, கூடத்தை நோக்கி மெல்ல நடக்கும்போது...

அங்கே குழல் விளக்கின் வெண் வெளிச்சத்தில் நனைந்து, சுழன்றுகொண்டிருக்கும் மின் விசிறிக் காற்றில் உலர்ந்து, ஸெட்டியில் உட்கார்ந்திருப்பவர்களை இவன் விழிகள் வெறிக்கின்றன.

தன் மாமியாரின் அண்ணா... அவரை அடுத்து தன் பிராயம் வரும் அவர் மூத்த மகன், தன்னைவிட பத்து வயசுக்காவது இளைய அவர் கடைசி பையன், தன் மாமனாரின் தம்பி, அவர் மகள், பிறகு தன் மனைவி மல்லிகாவின் தங்கை கமலத்தின் கணவன் ரங்கன், ரங்கனின் அப்பா,

ரங்கனின் தம்பிமார்கள் - அவர்கள் எல்லோரும் தன் கடைசி தம்பியைவிடப் பிராயம் குறைந்தவர்கள். தன் மைத்துனனின் நண்பன், மைத்துனனின் மனைவியின் தம்பி, நடையில் ஓரிரு பெண்கள் - எல்லோரும் தன்னை ஏறிட்டுப் பார்த்துவிட்டு அவர்கள் பேச்சில் ஈடுபட்டார்கள். பெண்கள் இவனைக் கண்டதாகவே பாவிக்கவில்லை. இவனுக்கு உட்கார நாற்காலி எதுவும் மீதியில்லை. பொடிப் பையன்களை எழுந்திருந்து இவனுக்கு இடம் கொடுக்க யாரும் சொல்லவும் இல்லை. ரங்கன் அவன் அப்பா தம்பிமார்கள் இவர்களின் முகங்களிலிருந்து தன்னை நோக்கி ஒரு இளக்காரம் பிரவகிப்பது போல்...

ஒரு கணம் அங்கே நிற்பதற்குள் தன் எண் சாண் உடம்பும் ஒரு சாணாகி விட்டதுபோல் ஒரு குமைச்சல்.

மெல்லத் திரும்பி இவன் முற்றத்தில் இறங்கினான். முன் அறையில் தன் செருப்புக்களைக் கழற்றிப் போட்டிருந்த மூலையில் வந்து, கீழே தரையில் உட்கார்ந்தான். கொட்டு, நாதஸ்வரம், சிங்கி இவைகளுடன், வாசிப்புத் தொடங்க நேரமாயிட்டுதா, இல்லையா என்று யோசித்தவாறு பரக்க பரக்கப் பார்த்துக்கொண்டு, அந்த அறையில் எதிர் கோடியில் உட்கார்ந்திருந்த மேளக்காரர்கள் இவனை உற்றுப் பார்த்தார்கள்.

மனத்தில் தாறுமாறாகச் சில காட்சிகள்.

கமலத்தைப் பெண் பார்க்க ரங்கன் வரும்போது கமலத்தை அற்புதமாக அலங்கரிக்க மல்லிகா மேற்கொண்ட சிரமம்.

பிறகு, கல்யாணத்திற்குப் பிறகு, வேலை உயர்வு கிடைத்து வெளியூர் செல்வதை முன்னிட்டு விடைபெற, ரங்கன் இவன் காரியாலய நேரம் தெரிந்திருந்தும் இவன் இல்லாத நேரத்தில் இவர்கள் வீட்டுக்கு வந்து விட்டுச் சென்றது, 'இது ஏன்?' என்று கேட்டதற்கு, 'கல்யாணம் கழிந்த பிறகு என் தங்கையையும் அவ புருஷனையும் நம்ம வீட்டுக்கு நீங்க கூப்பிட்டு விருந்து வைத்தேளா? வெகுமதி கொடுத்தேளா?' என்று மல்லிகா குத்திக் காட்டியது, 'வீட்டுக்கு யார் வந்தாலும் அவனுக்குச் சந்தேகம் தான், மகா சந்தேகப் பிராணி' என்று தன் மாமனார் ஊர்

முழு வதும் வதந்தியைப் பரப்பியது, இவனைக் கண்டால் உடனேயே முகத்தைத் திருப்பிக்கொண்டுவிடும் ரங்கன் உட்பட்ட அவன் குடும்பத்தார்களை, ஓரிரு தடவை அவர்கள் தங்கள் வீட்டு நடை தாண்டிச் செல்லும்போது மல்லிகா ஓடிப்போய் வீட்டுக்குக் கூப்பிட்டு உபசரித்தது.

'இப்போதான் ஊர் அழைத்து விட்டுத் திரும்ப வாறாங்களா?' என்று யாரோ சொல்வது கேட்கிறது. இவனைத் தாண்டிக் கலகல வென்று பேசிச் சிரித்தவாறு வெளியிலிருந்து வீட்டினுள்ளே பட்டும் பவிசுமாகச் செல்லும் மல்லிகா, கமலம், தன் மாமனாரின் சகோதரர்களின் பெண்கள்! அவர்கள் யாருமே - குறிப்பாக மல்லிகா தன்னைக் கண்டிருக்க மாட்டாளா - இவன் நெஞ்சுக்குள் உறுத்தல்.

இவன் கைக்கடிகாரத்தைப் பார்த்தான். மணி பத்தாகிக் கொண்டி ருக்கிறது. அன்று மத்தியானம், அனுமதித்திருக்கும் முக்கால் மணி நேரத்திற்குள் சாப்பாட்டை அள்ளிப் போட்டு விட்டுக் காரியாலயத்திற்கு ஓட இவன் பரபரத்துக் கொண்டிருக்கையில், இவன் மைத்துனன் சுந்தரமும், அவன் மனைவி கனகமும் காரில் வந்து இறங்கினார்கள். 'இங்கேதான் முதலில் வாறோம். மகள் ராஜம் சமைந்தாள். ராத்திரி ஒன்பது மணிக்குத் தலைக்குத் தண்ணி ஊற்றணும், ஊர் அழைக்க மல்லிகாவை இப்பவே அனுப்பணும்...'

இவன் 'சரி' என்றான். அவர்கள் போனவுடன், 'எங்க அம்மா அன்னிக்கே சொல்லியிருக்கிறாள். ஒரு குலைப் பழமும் அஞ்சு செட்டு வெற்றிலையும், ஒரு கிலோ சர்க்கரையும் நான் போகும்போது கூடகொண்டுபோகணும்' என்றாள் மல்லிகா.

மாசக் கடைசி. இவன் பர்ஸில் கூடிப் போனால் இரண்டு ரூபாய்க்கு மேல் இருக்காது. இதை அவளிடம் சொல்வதில் பயனில்லை.

'சரி சரி நீ புறப்படு' என்று விட்டு இவன் செட்டியார் கடைக்கு ஓடினான். காரியாலயத்திற்கு வேறு நேரமாகிக் கொண்டிருக் கிறது. எப்படியோ அவள் சொன்ன சாமக் கிரியைகளை எல்லாம் வாங்கி அவளையும் குழந்தைகளையும் இங்கே அனுப்பி வைத்து விட்டு, இவன் ஓடும்போது,

‘ஆபீஸிலிருந்து நீங்க நேரா அங்கே வந்து விடுங்கோ’ என்று உத்தரவிட்டாள் அவள்.

இப்போது கொட்டு வாத்தியக்காரர்கள் அமர்க்களமாய் ஜமாய்க் கத் தொடங்கி விட்டார்கள். வெளியில் இருந்து யார் யாரோ விருந்தினர்கள் வருகிறார்கள். அவர்கள் உள்ளே போய்ப் பார்த்து விட்டு, இங்கே மறுபடியும் திரும்ப வந்து, இங்கே எப்படிக் கீழே உட்காருவது என்று கீழே உட்கார்ந்திருந்த இவனை வியப்புடன் பார்த்துவிட்டுத் தயங்கி நிற்கிறார்கள்.

இவன் மாமனாரின் தலை தெரிகிறது. ‘ஏய் யாரங்கே... சும்மா பார்த்துக்கிட்டு நிற்கிறீங்களா! அந்தப் பெஞ்சியை எடுத்துப் போடு, உட்கார இடம் இல்லாமல் பெரியவங்க நிற்பது தெரியல்லையா...?’ என்று அதட்டியதும், கடைப் பையன்கள் சுறுசுறுப்பானார்கள். கீழே உட்கார்ந்திருந்த அவனை அப்போது தான் பார்த்தவராய், ‘என்னா... இங்கே உக்காந்துட்டீங்க...’ என்று பக்கத்தில் வந்து கேட்க, ‘அதுக்கென்ன’ என்று கூறி விட்டு, ஒரு புன்முறுவல் பூக்க இவன் முயற்சித்தான். புதுசாய் அங்கே கொண்டு போடப்பட்ட பெஞ்சியில், நின்று கொண்டிருந்தவர் கள் எல்லோருக்கும் உட்கார இடம் போதவில்லை. பெஞ்சில் உட்கார்ந்தவர்கள் போக ஓரிருவர் இவன் பக்கத்தில் வந்து உட்கார்ந்திருந்தார்கள். மீதியுள்ளவர்கள் நின்று கொண்டிருந்தார் கள். பெஞ்சில் உட்கார இவனிடத்தில் மாமனார் சொல்ல வில்லை. இதற்கிடையில் காரில் வந்திறங்கிய இரண்டு மூன்று பேர்களை அவர், ‘வாங்கோ... வாங்கோ... என்னா அங்கே நிண்ணுட்டீங்க... உள்ளே போய் உட்காரலாமே...’ என்று அமர்க்களமாய் வரவேற்று உள்ளே கூட்டிக்கொண்டு போகிறார். அவர்களுக்கு உட்கார அங்கே இப்போது எப்படி இடம் வந்தது என்று இவனுக்குத் தெரியவில்லை.

இப்போது முற்றம் அமர்க்களப்பட்டது. அங்கிருந்த யாரோ, ‘தலைக்கு தண்ணி ஊத்தப் போறாங்க... கெட்டி மேளம்... கெட்டி மேளம்’ என்று

சத்தம்போட, மேளக்காரர்கள் அப்பாடா... தீர்ந் ததே என்று தம் வாத்தியங்களில் கை வரிசையைக் காட்டினார் கள்.

இவனைச் சுற்றியிருந்த கடை சிப்பந்திகள், கூலியாட்களுடன்கூட இவனுக்கும் வெற்றிலை, பழம், சர்க்கரை வழங்கப்பட்டது. அவன் அதை வாங்கித் தன் செருப்புகள் கிடந்த இடத்தில், மிதிபடாதிருக்க ஒதுக்குப்புறமாய் வைத்தான்.

ஒவ்வொருவராய் விடை பெற்றுக்கொண்டு இறங்கிச் செல்லத் தொடங்கினார்கள். சிலர் அடுத்த நிகழ்ச்சி நிரலுக்காக உள்ளே பார்த்துக்கொண்டு ஒன்றும் தெரியாதவர்களைப்போல ஒதுங்கி நிற்கிறார்கள்... இவனும் வெளியேற மெல்லத் திரும்பிய போது, சுந்தரம் எதிர்ப்பட்டான்.

'என்ன காணவே இல்லையே... எப்போ வந்தேள்...?'

'நான் எட்டு மணிக்கே வந்தாச்சு... உங்களைத்தான் காணல்லே...'

'சரி... சரி... போய் விடாதீங்க... சாப்பிட்டு விட்டுத்தான் போகணும்...' என்று அவன் உபசரித்தபோது இவனுக்கு வயிற்றில் பகீரென்றது.

கைக்கடிகாரத்தில் மணி பதினொன்றரை தாண்டி விட்டிருந்தது. இந்த நேரத்தில், ஒரு பெப்டிக் அல்ஸர் பேஷண்டான தான் சாதம் சாப்பிட்டால், பிறகு சரிதான்...!

'இல்லை... நான் ராத்திரி சாப்பிடுவதில்லை... அதுவும் இந்த நேரத்தில்...! காப்பியானாலும் பரவாயில்லை...' என்று இவன் சொல்வதை சுந்தரம் செவிமடுத்ததாய்த் தெரியவில்லை. பக்கத்தில் கையில் பெரிய ஒரு பொட்டலத்துடன் விடை பெற்றுக் கொண்டிருந்த ஒருவனிடம், 'கோதண்டம்... மணி பதினொன்ணாச்சு... நீ இப்போ நடந்து போகவேண்டாம்... காரை அனுப்புகிறேன்' என்று விட்டு டிரைவரைக் கூப்பிட்டு அவனை வீட்டில் கொண்டுபோய் விட்டுவிட்டு வரக் கட்டளை இட்டுக் கொண்டிருந்தான்.

இப்போது எங்கிருந்தோ மல்லிகா இங்கே ஓடி வந்தாள். இவனைத் தனியாகக் கூப்பிட்டு, 'நீங்க சாப்பிடாமல் போகக் கூடாது... என்

அண்ணாவும் அப்பாவும் என்ன நினைப்பாங்க... பெயருக்காவது உட்கார்ந்து எழுந்திருங்கோ...' என்றாள்.

இவனுக்கு நெஞ்சுக்குள்ளிருந்து குபீரென்று ஆத்திரம் பீறிட்டுக் கொண்டுவந்தது. மற்றவர்கள் போகட்டும். இவளுக்குத் தன் உடல் நிலைமை சரிவரத் தெரியும். அடிக்கடி இவனுக்கு நேரும் ப்ளீடிங்குக்கு நேரடி சாட்சி; அப்படி இருந்தும் இப்படித் திடீரென்று உபசரிக்கத் தொடங்கி விட்டாளே.

கூடத்தில் இலைகள் போடப்பட்டிருந்தன. இவன் உட்கார்ந்து விட்டுப் பார்த்தபோது எதிர் வரிசையில் உட்கார்ந்திருக்கிறான் ரங்கன். கூட்டுக்குள் விளிம்பிக் கொண்டிருந்த மல்லிகா, இவனுக்கு முந்திய இலைவரை விளம்பி விட்டு, எதிர் வரிசையில் ரங்கன் இலையில் விளிம்பியபின், இவன் இலையில் போட்டாள். ரங்கன் முகத்தில் தொனிக்கும் குறும்புச் சிரிப்பைப் பார்க்காதவனைப் போல், வேறெங்கோ சூன்யத்தில் கண் நட்டு இவன் உட்கார்ந்திருந்தான். இருந்தும் பக்கத்தில் உட்கார்ந்திருப் பவர்கள் தன் முகத்தை உற்றுப் பார்ப்பதை உணர இவனால் முடிகிறது.

சாதம் போடும்போதும், சாம்பார் ஊற்றும்போதும் இதுவே திரும்ப நடந்தது. கமலம் சாமர்த்தியமாக அவள் கணவன் இலைக்கு விளிம்பி விட்டு, இவன் இலைக்கு வந்து கொண்டிருந்ததையும் கவனிக்காமல் இருக்க இவனால் முடியவில்லை.

சாப்பிட்டதாய் பெயர் பண்ணி விட்டு இவன் கை கழுவிக் கொண்டிருக்கும் போது மல்லிகா மறுபடியும் பக்கத்தில் வந்து சொன்னாள்.

'சங்கதி எல்லாம் சரி. சடங்கு அன்னிக்கு ஒரு பவுனாவது நாம் கொடுக்கணும். எனக்கு ஒரே அண்ணன். அண்ணனுக்கு ஒரே மகள் ராஜம். ஸ்வீட் ஐந்நூறாவது வேணும். இப்பவே சொல்லி விட்டேன், கேட்டேளா!'

இவனுக்குத் தலை சுழன்றது.

‘சரி, சரி நான் போறேன்.’

‘நீங்கள் போங்க. நான் ரெண்டு நாள் இங்கே நிண்ணுட்டு வாறேன்.’

சென்ற மாதம் நடந்த ஒரு நிகழ்ச்சி, இவன் அகக்கண்ணில் மின் வெட்டியது.

அர்த்த ராத்திரி வந்து படபடவென்று வெளிக் கதவைத் தட்டினார் அவன் மாமனார். கதவைத் திறக்கும் போது காருக்குள் இருளில் தெரியும் கமலம், ரங்கன் முகங்கள். அவள் அக்காவுக்கு சுகக் கேடு ரொம்ப கூடுதலா இருக்குது. ‘மல்லிகாவை கூட்டிக்கிட்டுப் போய்விட்டு, கொஞ்சம் கழிந்து திரும்பக் கொண்டுவந்து விட்டு விடுகிறேன்’ என்கிறார் மாமனார் கலவரத்துடன். ‘சரி இங்கே குழந்தைகள் எல்லோரும் தூங்குகிறார்கள். நான் பார்த்துக் கறேன். தகவல் சொல்லி விடுங்கள்’ என்று சொல்லி மல்லிகாவை மாமனார்கூட அனுப்பி வைக்கிறான். அன்று இரவு முழுவதும் லைட் எல்லாவற்றையும் போட்டுக்கொண்டு குட்டி போட்ட பூனையாய் மனம் படபடக்க வீட்டுக்குள் குறுக்கும் நெடுக்குமாய் அவன் நடந்துகொண்டிருந்தான். மல்லிகாவும் வரவில்லை. தகவலும் இல்லை. பிறகு தெரிந்தது. அவள் அக்கா வீட்டில், இவனைப் பற்றி ஞாபகம் இல்லாமல் மல்லிகா, கமலம், ரங்கன், இவன் மாமனார், மாமியார் எல்லோரும் அரட்டை அடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார்கள் என்று.

கமலம் இப்போது வெளியில் வந்து தன் அக்காளுக்காக இவனிடம் சிபாரிசு செய்தாள்:

‘அக்கா இங்கே நிற்கட்டும். நானும், ரெண்டு நாள் கழிஞ்சுதான் போவேன். சரிண்ணு சொல்லுங்கோ.’

தன்னைப்போல் பெண்டாட்டியையும் கூட்டிக்கொண்டு ரங்கன் தனிக் குடித்தனம் போகவில்லை. வீட்டில் கமலம் இல்லா விட்டாலும் அவள் காரியங்களைப் பார்க்க அவன் பெற்றோர்கள் இருக்கிறார்கள்.

‘அங்கே எனக்குப் பொங்கிப் போட யார் இருக்கிறாங்க. நான் ஒரு சீக்காளி. ஹோட்டலில் சாப்பிட்டால் சரிப்படாது.’

விருந்துக்கு வந்திருக்கும் மற்ற ஆண்கள், பெண்கள் தன்னைக் கேலியாய்ப் பார்ப்பதில் கூச்சப்பட்டுக்கொண்டு அவன் இப்படிச் சொன்னபோது, 'உங்களுக்கு எப்போதும் உடம்புக்கு இப்படித் தான். பாவம், எப்போதும் வீட்டோடு அடைஞ்சு கிடக்கத்தான் அவளுக்கு விதிச்சிருக்குது' என்று சொல்கிறாள் மாமியார்.

இவன் முகத்தில் சம்மத பாவத்தைக் காணாமல் வெகுண் டெழுந்த மல்லிகா சத்தம் போட்டாள். 'நீங்க என்னை இப்படிக் கஷ்டப்படுத்துவதினாலெத்தான், உங்க உடம்பிலெ சுகக்கேடு விட்டு மாறாமல் இருக்கு. நாளைக்கு உங்க அஞ்சு தங்கச்சி மார்களும் நாசமாகத்தான் போறாங்க. பெண்ணடி பாவம் சும்மா விடாது. ஊர் முழுவதும் சிரிக்கப் போறது.'

இவன் செருப்பில் காலை நுழைத்தவாறு, 'நான் முன்னால் போறேன். சாப்பிட்டுவிட்டு நீ இன்னிக்கு வராட்டி, பிறகு அங்கே வரவே வேண்டாம்' என்று சொல்லிவிட்டுப் படி இறங்கும் போது, அவன் மாமனார் யாரிடமோ, 'இந்த மாப்பிள்ளைக்கு எப்போதுமே முன் கோபம் கொஞ்சம் ஜாஸ்தி, ஒரு பொறுமை இல்லை' என்று ஒரு சகஜ பாவத்துடன் சொல்லிக் கொண்டிருப் பது இவன் செவியிலும் விழுந்தது.

23.08.1975 - தீபம் 11/1975

# 11. தூண்டுதல்

மொட்டை மாடியில் பளிச்சென்று காயும் வெயிலில் படபடத்துக்கொண்டிருக்கும் கடும் சிவப்புப் புடவைகள். ஈர ரவிக்கைகளைப் பிழிந்த கொடியில் விரித்துப் போட்டுக் கொண்டிருக்கும் அடிப் பாவாடை, ப்ரா மட்டும் தரித்திருக்கும் இளம் நங்கை.

கீழே பக்கவாட்டு ஜன்னலுக்குள் தெரிந்து மறையும் தேகங்கள். வெளியில் நிம்மதியாய் அசை போட்டுக்கொண்டு கிடக்கும் நாலைந்து பசுக்கள்...

முன் பக்க வாசலில் உள்ளே நெடு நீளத்தில் குகையாய்த் தெரியும் இருண்ட காரிடார்.

தெரு நடையில் மீன் கூடைகளை இறக்கிக் குத்த வைத்து உட்கார்ந்தவாறு சளசளவென்று பேசும் மீன்காரிகளின் வெள்ளை உதட்டு நுனிகள். கூடைக்குள் இடம் போதாமல் வெளியில் நீண்டு கிடக்கும் நெய் மீன்களின் கோபப் பார்வையைப் பாராட்டாது கையில் எடுத்து வாயிலிருந்து வெற்றிலைச் சாறு வழிய பேரம் பேசிக் கொண்டிருக்கும் பருத்த உடம்பு கொண்ட அரைக் கிழவி.

அந்த வீட்டு நடையில் ஒரு புத்தம் புதிய கார் வந்து நின்றது. காரின் கதவு அனாயாசமாகத் திறந்துகொண்டு இறங்கி வீட்டுக்குள் ஏறிச் செல்கிறவளின் விழிகளின் சிகப்பு...

- நரசிம்மன் ஒரு இருபது அடி வைத்திருக்க மாட்டான், இவனைத் தாண்டி விரையும் ஒரு டாக்ஸி... திரும்பிப் பார்த்த போது, அது அந்த

வீட்டு நடையில் நிற்பது தெரிகிறது... ஒருத்தி ஓடிவந்து காருக்குள் ஏறிக்கொண்டதும் அது விரைகிறது.

மேலே மொட்டை மாடியில் விழிகள் மறுபடியும் இவன் அறியாமல் சென்றபோது...

அங்கே அவள்...

தன்னையே பார்த்துக் கொண்டிருப்பதுபோல்...

இவனுக்கு வியர்த்துக் கொட்டியது. வேகமாய் நடந்தான். தன்னைப் பொறுத்த வரையில் இங்கும் தனக்குக் கிடைத்த பலன் ஏமாற்றம்தானே...

'சார்... சங்கதி எல்லாம் சரி... இங்கே வச்சு நமக்கு பிஸினஸ் கிடையாது. எனக்குத் தர வேண்டியதை முன் கூறாய்த் தந்து விட்டு எங்கே வேணுமானாலும் கூட்டிக்கிட்டு போ...' என்று விட்டாளே இந்த அரைக் கிழவி.

நெஞ்சில் இன்னதென்று தெரியாத நினைவு மூட்டங்கள்... வெயில் பளிச்சென்று பிடரியில் விழுகிறது. இப்போது கிழக்கில் இருந்து மேற்கே நடந்து கொண்டிருப்பது மாலையில் மேற்கிலிருந்து கிழக்கு நடப்பதற்குத்தானே என்ற ஒரு வெற்றுத் தன்மை...

வலப் பக்கமாய்த் திரும்பிக்கொண்டிருக்கும் ரோட்டின் முனையில் தென்னை ஓலையால் உருவாக்கப்பட்டிருந்த கசாப்புக் கடையைச் சுற்றி ஒரே கூட்டம்... போலீஸாரின் செந்தலைகள்...

கூட்டத்தின் இடை வழி எட்டிப் பார்த்தபோது தோல் உரித்துப் போட்டிருக்கும் ஒரு சினையான பசு மாடு... ஒரு எருமை... பச்சை மாமிசத்தின், ரத்தத்தின் கனத்தை வாடை.

'திருடிக்கிட்டு வந்து வயிறும் புள்ளையுமான இந்தப் பசு மாட்டையும், நோய் பிடிச்சுச் செத்த எருமையையும் ராவாடு ராவா வெட்டி இப்படித் தோலை உரிச்சுப் போட்டுவிட்டு, அப்புறம் கூறு போட்டு ஆட்டிறைச்சிண்ணு அநியாய விலைக்கு நம்மை எல்லாம் எத்தனை

நாளா இந்தப் பாவி ஏமாற்று கிறானோ…! உம்… நேத்தைக்குக்கூட இந்தப் படுபாவிகிட்டே யிருந்து ஒரு கிலோ வாங்கிட்டுப் போனேன்…'

பக்கத்தில் நிற்கிறவர் பிரலாபித்துக் கொண்டிருக்கிறார். மேலும், அங்கே நிற்க முடியாமல் இவன் நடந்து கொண்டிருந்தான். இருந்தும், அங்கே உறைந்து கிடந்த பச்சை ரத்தத்தின் நெடி கூடவே வந்து விட்டதைப்போல் ஒரு பிரமை; அதோடு பளிச்சென்று காயும் வெயிலில் படபடக்கும் செக்கச் சிவந்த புடவையின் இடையில் தென்பட்ட அந்த உடம்பு…

எதிரில் வந்து கொண்டிருந்த கணேசன் தன்னை நோக்கிச் சிரித்ததாய் ஒரு தோற்றம்… இவனால் சிரிக்க முடியவில்லை. நரைத்த கணேசனின் தலை மயிர் இவன் விழிகளைக் குத்தியது. இந்தக் கணேசனுக்கு மட்டும் இந்த நரை இல்லாதிருந்தால், தன் அக்காள் அவனைக் கல்யாணம் செஞ்சுக்கத் தாராளமாய் சம்மதித்திருப்பாள். தனக்கும் கணேசனின் தங்கை ரமாவைக் கல்யாணம் செய்திருக்க முடியும்…! இதனால் நஷ்டமடைந்தது யார்? தன் அக்காளுக்கும் வேறு இடத்தில் கல்யாணம் நடந்து விட்டது. தான் மட்டும்…

காரியாலய மாடிப்படிகளில் அவன் ஏறிக் கொண்டிருக்கும்போது முன்னால் என்னமோ பேசிச் சிரித்தவாறு நிதானமாய் நீங்கிக் கொண்டிருக்கும் கமலா - நாகநாதன் தம்பதிகள் பன்னீரின் ஒரு வாசனை…

மனசில் மறுபடியும் அந்த ஆவேசம்… விறுவிறுவென்று படியேறி, நாகநாதனின் பக்கத்தில் சென்று, 'நாகநாதன் சார்… ஆனாலும் நீங்க எங்கிட்டே இப்படி நடந்து கொண்டிருக்கக் கூடாது…' என்றான் அவன். கமலாவின் முகம் சிறுத்தது; மூக்கு விகசித்தது… பரஸ்பரம் மோதிக்கொண்ட தம்பதிகளின் இரு ஜோடி வழிகளும் ஒரு சேர கேள்விக் குறியாய் இவன்மீது விழுந்தன.

'காத்திருந்தவன் நான், நேற்று வந்தவன் நீ…' என்று விட்டு அவர்களைக் கடந்து வேகமாய் நடந்து தன் இடத்திற்கு வந்தான்.

இருக்கையில் உட்காரும்போதும் மனசில் அந்தச் சலனங்கள்... தலைக்குள் ஒரு உளைச்சல். கண்கள்கூட லேசாய் மங்குவது போலத் தோன்றியபோது, சில நாட்களுக்கு முன் மூளையில் புற்று நோய் என்று ஆஸ்பத்திரியில் அட்மிட் செய்யப்பட்ட தன் மாமாவை அவனுக்கு ஞாபகம் வந்தது. அவருக்கும் முதலில் எல்லாம் இப்படித்தான். அடிக்கடி தலை சுற்றல், கண் பார்வை மங்கல் என்றுதான் ஆரம்பித்தது.

எழுந்துபோய் மின் விசிறி ஸ்விட்சை முழு வேகத்திற்குத் திருகினான்.

'என்ன நரசிம்மா... இன்னைக்கும் உங்க அப்பாவைக் கூட்டிக் கிட்டு வரல்லையா?' என்று கேட்டான் நல்லமுத்து.

'அப்பா வர மாட்டேண்ணு விட்டார்...' என்று இருக்கையில் வந்து உட்கார்ந்தான் இவன்.

'அவர் வராட்டி உன் மேஜை மீதிருக்கும் இந்த ஃபைலையெல்லாம் எப்படி முடிக்கப் போறே? உனக்கானால் எல்லாமே டவுட். அதனால்தான் பென்ஷனராகி வீட்டில் சும்மா மோட்டைப் பார்த்துக்கிட்டு உட்கார்ந்திருக்கும் உன் அப்பாவைக் கூட்டிக்கிட்டு வரச் சொன்னேன்...'

நல்லமுத்துவின் முகத்தில் சிரிப்பில்லை. சீரியஸாகவே இருப்பதாய் இவனுக்குத் தோன்றியது. இவனுக்கு ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை.

ஃபைலைப் புரட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்கும் போது மீண்டும் மீண்டும் அந்தச் சந்தேகங்கள். சின்னச் சின்ன சாதாரண வார்த்தைகளின் ஸ்பெல்லிங்கில்கூட சந்தேகங்கள்... ரெஃபரன் ஸுக்கு இரண்டு ஆர் வேண்டுமா? ஃபர்தர்க்கு 'யூ' வா, 'ஏ' யா? இப்படி வெளியில் சொல்லக்கூட வெட்கமான சந்தேகங்கள்...

மதிய உணவு இடைவேளையின்போது அடுத்த அறையிலிருந்து ராமகிருஷ்ணன் ஒரு படத்துடன் வந்தான். அதைப் பார்த்தபோது உடம்பு இவனுக்குப் புல்லரித்தது.

நரசிம்மா, 'எப்படி? உனக்கு வருகிறவளுக்கு வேய்ஸ்ட் இந்த சைஸாவாது வேண்டாமா?'

மேலும் ராமகிருஷ்ணன் சொல்லிக் கொண்டிருப்பதைக் கேட்கக் கேட்க இவனுக்கு நெஞ்சுக்குள் ஒரே கிளுகிளுப்பு... அதோடு ஒரு சில சந்தேகங்கள்...

‘சேஃப் பீரியடைப் பற்றியெல்லாம் நீ இப்போ அலட்டிக்க வேண்டியதில்லை... இதெல்லாம் ஒண்ணு ரெண்டு ஆன பிறகு பார்த்துக்கொண்டால் போதும்...’ என்று ஒரே போடாய்ப் போட்டான் ராமகிருஷ்ணன்.

நல்லமுத்துவுக்கும் குஷி கிளம்பியது. ‘டேய் ராமகிருஷ்ணா, நீ போட்டோவையும் புஸ்தகத்தையும் எல்லாம் காட்டிக் காட்டி அவன் ஆசையைக் கிளப்பிக்கிட்டே இரு. இதுக்கெல்லாம் நரசிம்மனின் அப்பா சம்மதிக்க வேண்டாமா? அவரானால் மகனைப் பணம் காய்க்கும் மரமா நினைச்சுக்கிட்டிருக்கார்... வாஸ்தவம். சொல்லப் போனால் இப்போப் பிடிச்சு உள்ளே தள்ளி சிகிச்சை செய்ய வேண்டியது சாட்சாத் இவன் அப்பாவுக்குத்தான்...’

‘ஏய் நல்லமுத்து, நீ சும்மா இருடா... நரசிம்மா அவன் உன்னைக் கேலி செய்கிறாண்டா. நான் சொல்வதைக் கேளு...’ உனக்குப் படிச்ச பெண் வேண்டுமா? படிக்காதவள் வேணுமா?’

‘படிச்ச பெண்.’

‘வேலை உள்ளவளா, ஹௌஸ் வொய்ஃபா?’

‘வேலை உள்ளவள்.’

‘டாக்டரா, இஞ்சினீயரா, அட்வகேட்டா, ஐ.ஏ.எஸ். ஆபீஸரா?’

‘டாக்டர்.’

‘ஸைக்யாட்ரிஸ்ட் இல்லையா?’ என்று இடைமறித்துச் சொன்னான் நல்லமுத்து சிரிக்காமல்.

ராமகிருஷ்ணன், நல்லமுத்து சொன்னதைக் கேட்காதவனைப் போல் ‘அப்போ முதலில் உனக்காக நான் போய்ப் பார்த்துப் பேசி, உனக்குச்

சரிப்படுமாண்ணு அறிஞ்சுகிட்டு வர்றேன். அப்புறமா நீ அவள்கிட்டே போனால் போதும்' என்றான்.

மணி இரண்டாகி விட்டது. ராமகிருஷ்ணன் அவன் இடத்திற்குப் போய் விட்டான். நல்லமுத்து என்னமோ எழுதிக் கொண்டிருக்கிறான். இவன் மனத்தில், ராமகிருஷ்ணன் காட்டிய படம்... அவன் சுவாரஸ்யமாய் ஆழ்ந்து அனுபவித்து வர்ணித்த வார்த்தைகள்... காலையில் மொட்டை மாடியில் சிவப்புப் பின்புலத்தில் பார்த்த வாட்டசாட்டமான அங்கங்கள்... கசாப்புக் கடையின் பின்புறத்தில் தோல் உரித்து செக்கச் செவேரென்று கிடந்த சினை பசுமாடு, எருமை... பச்சை மாமிசத்தின் உறைந்த ரத்தத்தின் கனத்த நெடி...

எதிர் அறையில் டைப்ரைட்டிங் யந்திரத்தின் தட் தட் என்ற ஒலி... அதோடு முல்லை மலரின் மணம்...

இவனால் உட்கார்ந்திருக்க முடியவில்லை. எழுந்து டைப்பிஸ்டின் முன் போய் நின்று கொண்டு, 'ஐ வான்ட்டு ட்ரான்ஸ்பியூஸ் மை ப்ளட் இன்ட் யுவர் ப்ளட்' என்று சொல்லி முடிக்கும் முன் அவன் முகத்தில் படபடவென்று முரட்டுத் தனமாய் ஸ்லிப்பர் விழத் தொடங்கியது. நல்லமுத்துவும், ராமகிருஷ்ணனும் ஓடி வந்து அவனைப் பிடித்திழுத்து வெளியில் கொண்டுவந்தார்கள்.

'உங்களுக்கெல்லாம் என்ன வந்து விட்டதடா...' என்று ஒன்றும் புரியாமல் கேட்டுக் கொண்டிருந்தான் நரசிம்மன்.

'இவனைப் பார்த்துக்கோ ஆம்புலன்சுக்குச் சொல்லிவிட்டு வந்து விடுகிறேன்' என்று நல்லமுத்துவிடம் சொல்லி விட்டு டெலிபோன் இருந்த அறையை நோக்கி விரைந்தான் ராமகிருஷ்ணன்.

06.10.1975 - குமுதம் 30.10.1975

# 12. அந்நியன்

அ ந்த வீட்டு நடையில் அவன் வந்து சேரும்போது பின் நிலவு தோன்றி விட்டிருந்தது. தூங்கு மூஞ்சி மரக் கிளையில் தொங்கிக் கொண்டிருக்கும் வௌவாலைப்போல நிழல் மூட்டையாய்த் தெரிந்த வீட்டை, வெளிக்கேட்டின் முன் நின்றுகொண்டு ஒரு கணம் உற்றுப் பார்த்துவிட்டு அவன் மெல்லத் தட்டினான்.

வீட்டினுள்ளே ஏதோ ஓர் அறையிலிருந்து ஒரு குழந்தை அழும் ஓசை... அழும் வாய்க்குள் வலுக்கட்டாயமாய்த் திணிக்கப்படும் முலைக் காம்பால் அமர்ந்த குரலில் ஆகி, ஓரிரு நிமிஷத்தில் அடங்கி விட்ட அழுகுரல்...

பெருமூச்செறிந்து கொண்டிருக்கும் காற்று... மீண்டும் கதவில் தட்டியபோது இருளிலிருந்து அசரீரியாய் 'யாரது?' என்ற ஒரு கேள்வி, குறி தெரியாமல் அவனைக் கடந்து சென்றது.

'நான்தான்.'

'நான்தான் என்றால்...?'

அதற்கு அவன் பதில் சொல்லவில்லை. கீழே இடப் பக்க அறைக்குள் நிரம்பிய மின் வெளிச்சம் அடைந்து கிடக்கும் கண்ணாடிச் சன்னல் கதவின் மஞ்சள் நிறத்தைத் தோய்ந்தது.

முற்றத்திலும் ஒரு லைட் மின்னியது. ஆனால், அதன் ஒளிக் கரங்களுக்குத் தன் பக்கத்தில் வரும் வலுவில்லாதிருந்தது என்பதை அவன் கண்டுகொண்டான்.

ஓப்பன் வராந்தாவின் லைட்டின் கீழ் இப்போது ஒருவர் தென்பட்டார்... உடம்பில் சட்டை இல்லை.

அங்கேயே நின்று கொண்டு,

'யாரது இந்த நேரத்தில்' என்று இடுப்பு வேட்டியைக் கட்டிக் கொண்டே மறுபடியும் கேட்டார் அவர்.

அவர் தலையில் லேசாய் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கும் வழுக்கையிலும், வெற்றுடம்பிலும் பளபளவென்றிருந்த எண்ணெய் மினுமினுப்பைப் பார்த்தவாறு, 'நான்தான்' என்று சொன்னான் அவன்.

'நான்தான்... நான்தான்... என்று மட்டும் சொன்னால் எப்படித் தெரியும்?' என்று ஒரு எரிச்சல் தொனியில் சொன்னவாறு முற்றத்தில் இறங்கிக் கேட்டின் பக்கத்தில் அவர் வந்தார்.

'யார் நீங்க? யாரைப் பார்க்கணும்?'

'உங்களைப் பாக்கத்தான வந்தேன்.'

'என்னையா? நீங்க யாரு?'

'என்னைத் தெரியலையா?'

அவர் ஒரு தடவை கூடப் பார்வையைக் கேட்டின் வெளியில் செலுத்தி அவனை உற்றுப் பார்த்தார்... தெரிந்தது போலவும் தெரியாதது போலவும்...

'இருட்டில் சரியா தெரிய மாட்டேங்குதே...' என்று அவர் குரலில் ஒரு நடுக்கம் இருந்ததுபோல் இருந்தது.

'கதவைத் திறங்கோ... உள்ளே வெளிச்சத்தில் பார்த்தால் சரியாத் தெரிய வரும்...'

கேட்டின் உள் தாழை மெல்ல விலக்கி ஒரு ஆள் மட்டும் உள்ளே வரும் அளவு அகலத்திற்கு அவர் திறந்தார். கையிலிருந்த சிகரெட்டைத் தெருவில் எறிந்துவிட்டு அவன் முற்றத்தில் நுழைந்தான்.

அவர் முன்னால் சென்றார். அவன் அவரைப் பின்தொடர்ந்தான்.

வராந்தாவில் ஏறும் படிகளின் முன் லைட்டின் கீழ் வந்தபோது, அவர் திரும்பி நின்றார். இப்போது வெளிச்சம் அவன் முகத்தில் விழுந்து கொண்டிருக்கிறது. தோல் பையை இடது கை இடக்கில் வைத்துவிட்டு, பேண்ட் ஜேபியிலிருந்து ஒரு வெள்ளைக் கைக்குட்டையை எடுத்து முகத்தை அழுத்தித் துடைத்துக் கொண்டு நின்ற அவனை அவர் உற்றுப் பார்த்தார்.

அடர்த்தியான கூட்டுப் புருவம்.

கன்னங்கரிய மீசை.

ஓரிரு நரை வந்துவிட்ட சுருண்ட தலை மயிர்...

இவன்... இவன்...?

'நீயா... நீங்களா?'

'ஆமா... நானேதான்... இப்போ புரிஞ்சுதல்லவா? இனியாவது உள்ளே வரலாமல்லவா?' என்று லேசாய்ப் புன்முறுவலித்து விட்டு, அவர்கூட வராந்தாவில் நுழைந்து அங்கே கிடந்த நாற்காலியைச் சுட்டிக்காட்டி, 'இன்றைக்குப் பூரா ஒரே நடைதான் இங்கே நான் உட்காருவதில் ஆட்சேபணை இல்லையே' என்று கேட்டான்.

தன் இடக் கையால் நெஞ்சைத் தடவியபடி, எதையோ நினைவுக்குக் கொண்டுவர எத்தனித்துக் கொண்டிருந்த அவர், 'அதுக்கென்ன? உட்காரலாமே' என்று அனுமதி வழங்கியதும் தோல் பையைச் சுவர் அருகில் சாய்த்து வைத்துவிட்டு அவன் உட்கார்ந்துகொண்டான்.

பளபளவென்று மின்னிய அவன் கருத்த ஷூவின் மேல் கால் சராயின் அடியில் தெரியும் செக்கச் சிவந்த நைலான் ஸாக்ஸைப் பார்த்தவாறு எதிரில் கிடந்த ஸெற்றியில் அவரும் உட்கார்ந்து கொண்டார்.

நடுக்கூடத்திலும் இப்போது விளக்கு போடப்பட்டது. சாளரத்தில் தொங்கிக்கொண்டிருந்த கர்ட்டனின் இடைவெளி வெளிவந்த வெளிச்சத்திலிருந்து தெரிகிறது.

கதவைத் திறந்துகொண்டு வாசலுக்கு வந்துநின்று தூக்கக் கலக்கத்தில் கனத்த இமைகளுடன் அவனை நோக்கிய அவளிடம், ‘என்ன சௌக்கியந்தானா?’ என்று அவன் குசலப் பிரசனம் செய்தபோது, ‘நீங்க வந்தூ... வந்தூ...’ என்று இழுத்தாள்.

‘ஆமா... நானேதான்... நீங்க யாரும் இப்போ இந்த அகால வேளையில் என்னைக் கொஞ்சமும் எதிர்பார்த்திருக்க மாட்டீங்க; இல்லையா?’ என்று அவன் சொல்லிக் கொண்டிருந்தபோது, ஒரு பெண் குழந்தை எட்டு வயதிருக்கும், மெல்ல கண்களைக் கசக்கியவாறு, ‘அம்மா’ என்று முனகியவாறு வந்தது.

அவன் உட்கார்ந்தவாறே கையை நீட்டித் தோல் பையை எடுத்து மடியில் வைத்துக்கொண்டு ஸிப்பை இழுத்து உள்ளிருந்து நீண்ட ஒரு பிஸ்கெட் பொட்டலத்தைக் கையில் எடுத்து, ‘ராஜீ... என்னைத் தெரியுதா...? இதோ...’ என்று குழந்தையிடம் நீட்டினான். குழந்தை கலவரப்பட்டு அதன் அம்மாவின் முந்தானையைப் பிடித்துக்கொண்டு அவள் பின்புறத்தில் தன்னை மறைத்துக்கொண்டது.

‘என்ன ராஜீ...? பயமாயிருக்குதா... இதோ, உனக்காகத்தான் வாங்கிட்டு வந்திருக்கேன்’ என்று மறுபடியும் அவன் நிர்பந்தித் தான். ‘இதெல்லாம் எதுக்கு?’ என்று அவர் சொன்னபோது, ‘அதுக்கென்ன? பிஸ்கெட்தானே...’ என்றவாறு அதை டீப்பாயில் தினசரியின்மீது வைத்துவிட்டு, ஸிப்பை இழுத்து தோல்பையை அடைத்து சுவரோரத்தில் சாய்த்து வைத்தான்.

உள்ளே இருந்து முனங்கல் ஒலி... அவள் உள்ளே போனாள்; கூடவே குழந்தையும் சென்றது.

‘உங்க மொதல் சம்சாரம் இப்பவும் படுக்கையில்தானா?’

‘ஆமா’ என்று மேலிருந்து கீழ் அசைந்த அவர் முகத்தில் மறுபடியும் அந்த வியப்புக் குறி.

‘உம்... தலையெழுத்தை யாரால் மாற்ற முடியும்?’ என்று விட்டு சுவரில் காற்றில் அசைந்து கொண்டிருந்த காலண்டரில் பறந்து கொண்டிருந்த

பச்சைக் கிளிகளை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான் அவன்.

விளக்கை மொய்த்துக் கொண்டிருந்த பூச்சிகளில் ஒன்றாவது கிடைக்காதா என்ற பிடிக்கத் தருணம் பார்த்தவாறு பதுங்கியிருந் தது ஒரு பல்லி.

கால் சராய்ப் பையிலிருந்து சிகரெட் பாக்கெட்டை எடுத்து அவரிடம் நீட்டினான். அவர் சற்றுத் தயங்கியபோது, ‘உங்க பிராண்ட்தான்’ என்றபோது அவர் ஒன்றை எடுக்க, இவனும் ஒன்றை எடுத்துப் பற்ற வைத்துவிட்டு நெருப்புப் பெட்டியை அவரிடம் கொடுத்தான். அவரும் பற்ற வைத்துக்கொண்டார்.

சென்ற காலத்தின் சிறையிலிருந்து மூண்டெழும் புகைச் சுருள்கள்...!

நிசப்தம்...

உள்ளே மறுபடியும் குழந்தையின் அழுகுரல்...

‘ஆணா? பெண்ணா?’

‘பெண்தான்.’

‘கான்பூரிலிருந்து இப்போ கடிதம் வருவதுண்டா?’

அவன் முகத்தில் எதையோ தேடுவதுபோல் அவர் ஒரு கணம் உற்றுப் பார்த்தார். அவன் விழிகள் அந்தக் காலண்டர் கிளிகளிடம் இருந்தன.

‘நான் வாசிச்சுப் பார்ப்பதில்லை’ - அவர் முகத்தில் ஒரு கடுகடுப்பு.

‘சீனிவாசனின் அம்மாவுக்குத் தெரியுமா?’

‘தெரியாது.’

‘ஹூம்... அதுவும் நல்லதுதான்.’

மறுபடியும் நிசப்தம்!

டப்...

இந்தப் பல்லி கீழே விழுந்தது. அதன் வாயில் ஒரு சின்னப் பூச்சி... விழுந்த அதிர்ச்சியால் ஒரு கணம் பல்லி தயங்கி நின்று விட்டு எங்கோ

ஓடி மறைந்தது.

வாசலில் நிழல்...! அவள் அங்கே நின்றுகொண்டிருந்தாள்.

‘தூங்கிட்டாங்களா?’ என்று அவன் கேட்டதுக்கு அவரைப் பார்த்தவாறு ‘ஆமா’ என்று சொன்னாள் அவள்.

‘நான் வந்திருக்கேண்ணு சொல்லலல்லியே...’

‘இல்லை.’

‘யாருண்ணு கேட்டிருப்பாங்களே?’

‘கேட்டாங்க.’

மறுபடியும் பல்லி சுவரில் ஏறிக்கொண்டிருந்தது. கிளிகள் பறந்து கொண்டிருந்தன.

‘அப்போ நான் போயிட்டு வரட்டுமா?’

அவர் அவளைப் பார்த்தார். அவள் முற்றத்தில் பதுங்கிக் கிடந்த இருளைப் பார்த்தவாறு நின்றுகொண்டிருந்தாள்.

சிகரெட்டை அணைத்து ஆஷ் ட்ரேயில் போட்டுவிட்டு கையை நீட்டி தோல் பையை எடுத்தான்.

மெல்ல எழுந்து எங்கென்றில்லாமல் பார்த்தவாறு சற்று நேரம் நின்றான்.

மௌனத்தின் கனத்த கால் சுவடுகள்!...

திரும்பி ஓரிரு அடிகள் எடுத்து வைத்துவிட்டு, நின்று திரும்பிப் பார்த்து, ‘நீரஜாவிடம் ஏதாவது சொல்லணுமா?’ என்று அவளை நோக்கிக் கேட்டான். அவள் கண்கள் பனித்தன...!

‘ஒன்றும் சொல்ல வேண்டாம்...’ என்று அவசரப்பட்டுக் கொண்டு சற்றுக் கோபத்துடன் அவர் பதில் சொன்னார். சற்று நேரம்கூட அவன் அப்படியே நின்றான். முகத்தில் தீவிர எறும்புகள் ஊர்வதுபோல்...!

என்னவோ நினைத்ததுபோல் உள்ளே பார்த்து, ‘அவுங்களை நான் ஒரு தடவை பார்த்துக்கிட்டுப் போகட்டுமா?’ என்று கேட்டான்.

ஒரு கணம் யாரும் பதில் சொல்லவில்லை. அவர் சிகரெட்டை ஆஷ் ட்ரேயில் போட்டுவிட்டு எழுந்தார். அங்கிருந்து எழும்பிக் கொண்டிருக்கும் புகைச் சுருள்கள்...

'எழுப்ப மாட்டேன்... ஒரே ஒரு தடவை முகத்தைப் பார்த்து விட்டுப் போயிடுவேன்.'

அவர் முகத்தால் சைகை காட்டி விட்டு உள்ளே போனார். பையும் கையுமாய் அவரைப் பின் தொடர்ந்து அவனும் உள்ளே சென்றான்.

அவள் அங்கேயே நின்றாள்.

ஓரிரு நிமிஷங்களில் இருவரும் உள்ளிருந்து வெளியே வந்தார்கள். அவன் முகம் இருண்டு போயிருப்பதாய் அவளுக்குத் தோன்றியது.

விடை பெற்றுக்கொண்டு சென்ற அவன்கூட முற்றத்தில் இறங்கி வெளிக் கேட்டை அடைந்து உள்ளிருந்து தாழிட்டு விட்டு வந்து அவளைப் பார்த்த அவர் முகத்திலிருந்தே அதே பாவம் அவன் முகத்திலும் நிரம்பி நின்றது.

'இப்போது ரெண்டு பேருமா அவனை விரட்டியடிச்சுட்டீங்க, இல்லையா...?' என்ற கதறலுடன் உள்ளிருந்து பரிதாபமாய் அழுகை ஓலம் கேட்கத் தொடங்கியது.

13.10.1975 - பம்பாய்த் தமிழ்ச் சங்க நாடக விழா மலர், 1975

# 13. போதை

பின் ஸீட்டிலிருந்து இவன் இறங்கியதும் கார்த்திகேயனும் இறங்கி ஸ்கூட்டரை ஸ்டேண்ட் போட்டு நிறுத்தினான். இவன் விழிகள் அந்தத் திறந்தவெளி ஹோட்டலின் பூங்காவில் மேய்ந்தன. ஸந்தியா நேர ஊமை வெளிச்சத்தில் அங்கொன்றும் இங்கொன்றுமாய் முளைத்து நிற்கும் மங்கிய ஒளிஉமிழும் விளக்கக் கம்பங்கள் மேலும் இருள் படுத்திக்கொண்டிருந்தன. கையும் காலும் கீறி விட்ட கோஸ்டுகளாய் ஏழெட்டு பேர்கள் அங்கே நிற்பதும் தெரிந்தது.,

'நீங்க கால்மணி நேரம் லேட்' என்று விட்டு இவனையும்... அவனையும் கைகளைப் பிடித்துக் குலுக்கி அமர்க்களமாய் வரவேற்றவனைச் சட்டென்று இவனால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஓ இவன் ஜெயின் அண்ட் கோவின் லோக்கல் ரெப்ரஸன்டேட்டிவ் பொன்னுசாமி அல்லவா!

'எக்ஸ்க்யூஸ் மீ... மத்தவங்க எல்லோரும் வந்துட்டாங்களா...?'

'வந்துட்டாங்க...'

கீழே பாதங்களை ஆதுரத்துடன் ஸ்வீகரிக்கும் அடர்த்தியான பச்சைப் புல், மேலே பின்னிப் பிணைந்து கிடக்கும் அடர்ந்த மரக் கிளைகள்...

ஆதிதேயன் வர்மா இவர்களை முகமன் கூறி வரவேற்றான். ஏனைய நண்பர்களும் பங்கு சேர்ந்தார்கள். வர்மாவின் மாமா பாஸ்கரனும், பொன்னுசாமியும் சுறுசுறுப்பாக இயங்கிக் கொண்டிருந்தார்கள்.

கசமுசாவென்று வார்த்தையாடியவாறு எல்லோரும் பிரம்பு நாற்காலிகளில் வந்து உட்கார்ந்தார்கள். நாற்காலி அளவு உயரமே இருந்த, செந்நிற ஸன்மைக்கா பதித்த நெடு நீளமேஜை மீது, கண்ணாடி ஜாடியிலிருந்த

வெங்காய ஊறுகாய் நீரை ஸ்பூனில் எடுத்துச் சந்திரன் சுவைப்பதைக்கண்டு, ரவியும் நாகப்பனும் இன்டரீம் ரிலீப் என்று கூறி அதைப் பின்பற்றி நாக்கைச் சப்புக் கொட்டினார்கள்.

பாட்டில்கள், கண்ணாடி தம்ளர்கள், ஐஸ் பெட்டிகள் பரஸ்பரம் முட்டி மோதிக் கலகலத்து மேஜைமீது சஞ்சரிக்கத் தொடங்கிய போது, இவனைச் சுட்டிக்காட்டி ரவி எச்சரித்தான். 'கேசவன் இனி பேசுவதை யாரும் கணக்கில் எடுக்க வேண்டாம்.'

அதைச் செவிமடுக்க யாருக்கும் நேரம் இருந்ததாய்த் தெரிய வில்லை. ஆனாலும் ரவியின் சரமாரியான பேச்சில் மற்றவர் களின் குரல்கள் அமுங்கிப்போய் விட்டிருப்பதாய்ப் பட்டது. இவன் வலப் பக்கத்திலிருந்த கார்த்தி திடீரென்று எழுந்துபோய் அவன் கையைப் பிடித்துக்கொண்டு மன்னிப்பு கோரி விட்டு வந்தது எதற்கென்று புரியவில்லை. இவன் இடப் பக்கமிருந்த பலவேசத்திடம் ரவி பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஹமீத் ஓடி வந்து, 'நீ நம்ம க்ரூப்பில் ஒவ்வொருத்தனையும் உன் கார்ட்டூனில் அட்டாக் பண்ணிக் கொண்டிருக்கிறே போலிருக்கே... அடுத்தது யாரைக் கண்ணி வச்சிருக்கே?' என்று கேட்டான் எகத்தாளமாய்.

'அடுத்தது சாட்சாத் நீதாண்டா! ஐ ஆம் கலெக்டிவ் சம் மோர் டிட்டயில்ஸ் எபவுட் யூ' என்று ஒரே போடாய்ப் போட்டான் பலவேசம்.

ஹமீத் சட்டென்று தன் சட்டைக் காலரையும், தோள்வரை கிடந்த தலை மயிரையும் (நண்பர்கள் அவனை ராஜபார்ட் என்று கேலியாய் அழைப்பார்கள்) சரி பண்ணிவிட்டு, 'சங்கதியெல்லாம் சரி, நான் ஹீரோவாய் இருக்கணும், வில்லனாக்கி விடாதே'' என்று கௌரவமாய் சொல்லிவிட்டு தன் இருக்கைக்குப் போனான்.

பாஸ்கரனும், பொன்னுசாமியும் மேற்பார்வையிட வெண் உடை தரித்த ஹோட்டல் ஊழியர்களின் படை, மேஜைமீது பீங்கான் தட்டுக்களையும் தம்ளர்களையும் வைத்துக் கொண்டிருந்தார்கள்.

எல்லோரும் கர்மமே கண்ணாயினார்கள்.

‘சே, இதென்ன கிழட்டுக் கோழியா, வலுக்கு வலுக்குண்ணு ஒரே ஹார்டு...’ என்றவாறு கோழியுடன் பல்லால் மல்லிட்டுக் கொண்டிருந்தான் ராமய்யா.

‘கொஞ்சம் பதமாய்க் கடி... கோழி வயிற்றுக்குள்ளேபோய், நடுச் சாமத்தில் பெண்டாட்டிகிட்டே வச்சுக் கூவப் போவுது’ என்றான், ஆத்மனாதன்.

‘சிக்கன் எனக்கு வேணாம்; மட்டன் கொண்டு வா’ என்றான் கார்த்தி.

‘ஏண்டா?’ என்று இவன் கேட்டபோது.

‘கோழி எங்க குல தெய்வம் முருகனின் அபிமான பட்சி. நான் தொட மாட்டேன். பாவம்’ என்று விட்டுத் தம்ளரில் முழுகியிருந் தான் அவன்.

இப்போது ரவியின் சத்தமே வெளியில் கேட்கவில்லை. இதுவரை மௌனியாக இருந்த கார்த்தியின் குரல் மற்ற குரல்களை எல்லாம் அமுக்கி ஒலித்துக்கொண்டிருந்தது.

குளிரத் தொடங்கி விட்டிருந்தது. ஒன்பது மணி சைரன் ஒலித்ததும், நாலைந்து பேர்கள் விடை பெற்றுக்கொண்டு செல்லத் தொடங்கினார்கள்.

இந்த லாஸ்ட் பெர்ஃபாமன்ஸையும் பார்த்து விட்டுக் கையில் முழுப் புட்டியுடன் மேஜைமீது குதித்து ஏறினான் சந்திரன். கடை வாயில் வழிய, புட்டியை மடமடவென்று அப்படியே வாயில் கவிழ்க்கலானான்.

‘நேற்றைக்கு என் பிரிய பத்தினியின்...ல் அடித்துச் சத்தியம் செஞ்சு கொடுத்தேன். இந்த இழவைத் தொட மாட்டேண்ணு’ என்று நாக் குழற சொல்லியவாறு நிலத்தில் கால் உறைக்காமல் ஆத்மனாதனின் தோளில் கையைப் போட்டு நடந்து கொண்டிருந் தான் வத்சலன்.

‘நானும்தான் டாக்டர்கிட்டெ ப்ராமிஸ் செஞ்சிருக்கேன்... அவுங்க அறியப் போறாங்களா... நெவர் மைன்ட்’ என்று ஆசுவாசப்படுத்தியவாறு ஆத்மனாதனும் நகர்ந்து கொண்டிருந்தான்.

கார்கள், ஹெட்லைட்கள் மின்னி உறுமத் தொடங்கின. பைக், ஸ்கூட்டர்கள் ஸ்டார்ட் செய்யும் படபட...

இப்போது மேஜையின் முன் இவனும், கார்த்தியும் மட்டுமல்ல... எதிரில் மீசையை அருமையாய் வருடிக் கொண்டிருக்கும் வர்மா. அவன் பின்னால் பாஸ்கரனும், பொன்னுசாமியும் கார்த்தியின் தம்ளரை நிரப்பி உபசரிப்பதில் மேலும் மேலும் உற்சாகம் காட்டிக் கொண்டிருக்கிறார்கள், அவர்கள்.

'உனக்கு ஸ்கூட்டர் விடவேண்டாமா, போதும்டா...' என்று விட்டு தம்ளரை வாங்கித் தரையில் இவன் கொட்டியபோது, கார்த்தி சாடியெழுந்தான்.

'கேசவா... என்ன வேலையடா இது! படுவா... பெரிய யோக்கியன்' என்று இவன் சட்டையைப் பிடித்து உலுக்கினான் கார்த்தி.

'போகட்டும் கேசவனை விடு கார்த்தி... நானல்லவா இருக்கேன்... வேறெ ஊற்றித் தரேன்' என்று அவனைச் சமாதானப்படுத்தி உட்கார வச்சு உபசரித்தான் வர்மா.

மறுபடியும் தொடங்கியது. உள்ளுக்குள்ளிருந்து திகட்டி வந்து கொண்டிருந்த எங்கோ எப்போதோ கேட்ட பாட்டின் வரியில் லயித்து, சொறி பிடித்த வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான் இவன்.

கார்த்தி ஸ்கூட்டரை ஸ்டார்ட் செய்தபோது, பின் ஸீட்டிலிருந்த இவனும் வர்மாவை நோக்கிக் கை வீசி விடைபெற்றான்.

ஸ்கூட்டர் வில்லில் இருந்த தெறித்த அம்பாகியது.

பளிச்சென்ற சாலை விளக்கு வெண் வெளிச்சத்தில் மல்லாந்து நிர்வாணமாய் கிடக்கும் வீதி. முகத்தில் வந்து அறையும் குளிர்ந்த காற்றால் விழிகளிலிருந்து நீர் வழிந்து கொண்டிருந்தது.

இவனுக்கு உள்ளுக்குள் பயமாயிருந்தது. அதைக் கார்த்தியிடம் சொல்லத் தெரியாமல் விழுங்கிக் கொண்டிருக்கும் போது, என்ன நடந்தது என்று அவதானிக்கும் முன், பயந்தது நடந்து விட்டிருந் தது.

இந்தக் கணம் துவங்கி முடிந்தும் ரோட்டோரத்தில் தான் கிடப்பது இவனுக்குப் புலனாகியது. தெறித்து விழுந்த அதிர்ச்சி விலகி, ஓரிரு நிமிஷத்தில் தள்ளாடியவாறு எழுந்து நின்றபோது குப்புற மறிந்து கிடக்கும் ஸ்கூட்டர்...

அருகில் கிடக்கும் கார்த்தி...

மெல்ல அவன் அருகில் சென்றான். காயம் எதுவும் தென்பட வில்லை.

'கார்த்தீ... கார்த்தீ...'

அவன் அசையவில்லை. ரோட்டில் யாரையும் தென்பட வில்லை. அவன் கிடப்பதைப் பார்த்தால் பயமாய் இருந்தது.

இவனுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை மூளை ஸ்தம்பித்துப்போய்விட்டதுபோல். ஒருவேளை செத்துப்போய் விட்டிருப்பானோ? மூக்கின் கீழ் புறங்கையை வைத்துப் பார்த்தபோது லேசாய் மூச்சு வந்துகொண்டிருப்பது தெரிகிறது.

இப்போது வீதியில் ஒரு பைக் வரும் ஓசை... ஒற்றைக் கண்ணாய் அதன் ஹெட்லைட் உமிழும் ஒளி... பக்கத்தில் வந்ததும் அது நின்றது. ஓசை அடங்கியது. ஸ்டேண்ட் போட்டு நிறுத்திவிட்டு 'என்ன' ஆக்ஸிடன்டா?' என்று கேட்டவாறு பைக்வாலா ஓடி வந்தான்.

இவன் என்ன சொல்வதென்று தெரியாமல் திருதிருவென்று விழித்தான். 'என்ன ஆக்ஸிடன்டா' என்று தனக்குத்தானே கேட்டுக்கொண்டான்.

வந்தவன் கார்த்தியைத் தூக்கி உட்கார வைத்தபோது, 'ஏண்டா வெட்டினே... ஹும்... ஸுநிதா...' என்றெல்லாம் நாக்குழறச் சொல்லியவாறு மறுபடியும் குப்புறப் படுத்துக்கொண்டான். சுநிதா கார்த்தியின் மனைவியல்லவா என்று நினைவில் கொண்டு வர இவன் கடுமையாய் முயற்சித்துக் கொண்டிருந்தபோது, பைக் வாலா இவன் அருகில் வந்து இவனையும் பார்த்தான்.

'அப்போ ரெண்டு பேரும் புல் லோடா, சரிதான்...' என்றுவிட்டு, அவன் நிதானமாய்ச் சென்று ஸ்கூட்டரை நிமிர்த்தி உருட்டிக் கொண்டு வந்து

ரோட்டோரத்தில் அவன் பைக்கின் முன்னால் நிறுத்தினான்.

'நல்லவேளை...' என்று தொடங்கி மேலே அவன் சொல்லிக் கொண்டிருந்தவை என்னவென்று சரியாக இவனுக்குக் கேட்கவில்லை. அவனிடம் எதையோ சொல்ல வேண்டுமென்று இவனுக்குத் துடிப்பாக இருந்தது. ஆனால், எதையும் தெளிவாய்ப் பேசவும் இயலவில்லை. இருந்தும் அவன் பக்கத்தில்போய், 'கடவுளாகத்தான் உங்களை இப்போ இங்கே கொண்டு வந்தது; இந்தக் கோலத்தில் நாங்க ரெண்டு பேரும் இந்த இடத்தில் கிடந்தா எங்க வேலை போயிடும்; எங்க வாழ்க்கையே பாழ். எதுக்கும் ஒரு டாக்ஸி கொண்டு வர முடியுமா...' என்று எப்படியோ சொல்லி முடித்தான்.

'சரி... நீங்க பயப்படாதீங்க... அப்படி ஒதுக்குப்புறமா உக்காருங்க... இதோ வர்றேன்' என்று விட்டு அவன் பைக்கை ஸ்டார்ட் செய்தான்.

சற்று நேரத்தில் ஒரு டாக்ஸி வந்தது. கார்த்தியைத் தோள் பட்டையில் பிடித்து அவன் தூக்க, இவன் கால் மாட்டில் பிடித்துக் கொள்ள எப்படியோ காருக்குள் தூக்கிப் போட்டார்கள்.

'நீங்களும் ஏறிக்குங்க' என்று இவனையும் உள்ளே தள்ளிக் கதவை அடைத்தபோது இவன், 'இந்தக் கோலத்தில் நாங்க போனா ஒருத்தரும் ரூம் தர மாட்டாங்க; எங்ககூட கொஞ்சம் வர முடியுமா?' என்று கேட்டான்.

'சரி... உங்க வண்டியை இப்படி இங்கே போட்டுவிட்டு வந்தா எப்படி?' என்று விட்டு, டாக்ஸி டிரைவரிடம், 'லக்ஷ்மி லாட்ஜ் முன்னால் போய்க் காரை நிப்பாட்டு, பின்னால் நான் வாரேன்' என்று சொல்லி விட்டு ஸ்கூட்டர் பக்கம் போனான்.

ஆள் அரவமில்லாத ஏதோ ஒரு காட்டுக்குள் சஞ்சரிப்பதுபோல் இவனுக்கு ஒரு பிரமை. வீட்டில் தன்னைக் காத்துக்கிட்டிருப் பவர்களை ஒரு கணம் மனம் நினைத்துப் பார்த்துக்கொண்டது. இவனை இங்கே இந்த நிலைமையில் விட்டு விட்டு எப்படிப் போவது...

கார் நின்றது போலிருந்தது. கார்த்தியின் ஸ்கூட்டரில் வந்து இறங்கினான் அவன். இப்போது ஒருதடவைகூட அவனை உன்னிப்பாய் பார்த்தபோது...

என்றோ எங்கோ பார்த்த முகம்...

'காரிலேயே இருங்கோ... நான் உள்ளேபோய் ரூம் எடுத்துக் கிட்டு வாறேன்' என்று விட்டு அவன் உள்ளே போனான்.

சிறிது நேரத்தில் வெளியே வந்தான். இவனும் அவனும் கைத்தாங்கலாய்க் கார்த்தியைப் பிடித்து, மெல்ல நடத்தி உள்ளே கூட்டிக்கொண்டு சென்றார்கள். அறைக்குள் வந்து கட்டிலில் வைக்கும்போது அது ஒரு டபிள் அறை என்பதை இவன் கவனித் தான். இவனும் மெல்ல சுவரோரத்தில் கிடந்த இன்னொரு கட்டிலில் சாய்ந்தான். கொஞ்ச நேரத்தில் தான், தானல்லாமலாகி விட்டதைப் போன்ற ஒரு மயக்க நிலைமை.

விழிகளைத் திறந்தபோது, மேலே சுழன்று கொண்டிருக்கும் விசிறி... எதிரில் அவன்: 'சரி... அப்போ நான் போயிட்டு வரட்டுமா?'

இவன் எப்படியோ சமாளித்துக்கொண்டு எழுந்து உட்கார்ந்தான். தலைக்குள் கனம். நடந்தவைகள் எல்லாம் புகை மூட்டமாய்...!

திடீரென்று டாக்ஸிக்குத் தான் வாடகை கொடுக்கவில்லை என்பது இவனுக்கு ஞாபகம் வந்தது. இவன் பேண்ட் பாக்கட்டிலிருந்து பர்ஸை எடுத்து அவனிடம் நீட்டி, 'கார் வாடகை' என்று சொல்லத் தொடங்கும்போது, 'எல்லாம் கொடுத்து அப்பவே அனுப்பியாச்சே...' என்றான் அவன்.

இவன் உணர்ச்சி வசப்பட்டான். 'நீ யாரப்பா... கடவுளாக நல்ல சமயத்தில் வந்து...'

மேலே இவனால் பேச முடியவில்லை, நா தழுதழுத்தது.

'சாரை எனக்குத் தெரியும். இப்போ அதெல்லாம் எதுக்கு... அந்த ஆள் கொஞ்ச நேரம்கூடத் தூங்கட்டும். எழுந்திருக்கும்போது மோரில் எலுமிச்சம் பழம் பிழிஞ்சு கொடுங்கோ; வாந்தி யெடுக்கும். அப்புறம்

சரியாகி விடும்! என் பைக் அங்கே இருக்குது. நான் போறேன். உள்ளே தாழ் போட்டுக்கங்க...' என்றுவிட்டு அவன் போய்விட்டான்.

இவன் நெஞ்சுக்குள்ளிருந்து அந்தத் தழுதழுப்பு. அப்படியே உட்கார்ந்திருக்கும்போது தலை சுற்றியது. வயிற்றுக்குள் என்னவோ புரட்டிக்கொண்டுவந்து, தொண்டைக் குழியை நெட்டித் தள்ளுவதுபோல்...

வாஷ் பேஷின் பக்கம் ஓடினான். இவன் குமட்டிக் குமட்டி வாந்தியெடுத்துக் கொண்டிருக்கும்போது, 'ஸுநிதா வஞ்சகி, வர்மா துரோகி...' முதலிய பலகீனமான வார்த்தைகள் முனகல்களாய் கார்த்தியிடமிருந்து வெளிவரத் தொடங்கின.

13.11.1975 - கணையாழி 7/1976

# 14. தேடுகிறவர்கள்

ஜ மீலா பிளாட்பாரத்தில் கால் தடுக்கி விழுந்து உதட்டிலும், காலிலும் காயம் பட்ட விவரத்தைச் சொல்லிக் கொண்டிருந்தான் பலராமன்.

‘நல்ல வேளை... நம்ம டாக்டர் ராமராவு ஒரு எம்.பி.பி.எஸ். காரர். ஆதலால் முதல் உதவி செய்ய முடிஞ்சுது...’

ராமாராவும், பிரபாகரனும், அஜீத்தும், மேலே பர்த்தில் அதற்குள் படுத்துக் கொண்டு தூக்கத்தை வரவழைக்க முயற்சித்துக் கொண்டிருக்கும் மோகன்ராவும் பலராமன் நாடகீயமாய்ச் சொல்லும் முறையைக் கேட்பதில் சுவாரஸ்யமாய் ஈடுபட்டிருந்தார்கள்.

இவன் புன்முறுவல் பூத்தபடி, முந்திய நாள் ஹோட்டலில் வைத்து டாக்டர் ராமாராவு சொன்ன அசட்டு ரிஷியும், சிஷ்யையும் கதையை நினைத்துக் கொண்டிருந்தான்.

பிரபாகரன் சொன்னான்:

‘என்னவோ... இந்த ஊருக்கு நாம் வந்த நேரம் சரியில்லை போலிருக்குது... இந்த ரயில் புறப்படுவதுக்கு முந்திய ஐந்து நிமிஷ நேரத்தில் என்னவெல்லாம் களேபரங்கள்... லிக்கருக்குப் பைசா கொடுக்கலைன்னு பார் பையன் வந்து நிக்கிறான்... ஹோட்டல் கணக்கை முடிக்க முதலாளி கூப்பாடு போடு கிறான்... இதுக்கிடையில் இந்த கிரேட்டஸ்ட்ஃபால்... நம்ம ராமதாஸ் எங்கே என் பெட்டி... பிக்கட்ஸ் ஸூட்கேஸ் அப்படீண்ணு ரயிலில் ஒரு கால் பிளாட்பாரத்தில் ஒரு காலாய் நிண்ணுக்கிட்டு சத்தம் போடுகிறார்... இந்தக் களேபரத்திலும் தன் சொந்த வீர தீர பராக்கிரமங்களை அடிக்க

வருவதைப்போல் மேல் ஸ்தாயியில் சத்தம் போட்டுச் சொல்லி ஹா... ஹா... என்று சிரிக்கும் மிஸஸ் பரமேஸ்வரி வைத்தியனாதன்... எப்படியோ ரயில் புறப்படும் முந்தி நாம் எல்லோரும் உள்ளே ஏறி விட்டதே பெரிய காரியம்...'

ஷட்டர் எல்லாம் சாத்தியிருந்தும் லேசாகக் குளிர்ந்தது. அஜித் சிகரெட்டைப் பற்றவைத்தான்... மோகன்ராவ் மேலே படுத்தபடி தலையை நீட்டி 'மணி என்னாச்சு?' என்று கேட்டார்.

'ஒன்பதரை... அதுக்குள்ளே தூக்கமா...?' என்றான் இவன். அவர் பதில் எதுவும் சொல்லாமல் கொட்டாவி விட்டார்.

'இந்த பஸ்ட் கிளாஸ் கம்பார்ட்மென்ட் பூரா நம்ம டீம் தானே...?' என்று கேட்டான் ராமாராவ்.

'இல்லை... இது உட்பட நாலு அறைகளில் நம் நண்பர்கள் இருக்கிறாங்க...'

'பாவம் அந்த கிருஷ்ணசிங்... பஸ்ஸில் வைத்து வழி நெடுக வாந்தியெடுத்துக்கிட்டே வந்தான்... இப்போ நல்ல டெம்பரேச் சர் வேறு இருக்குது... ட்டூரை டிஸ்கன்டின்யூ பண்ணி ஊருக்குத் திரும்பப் போவதாய் சொல்லிக்கிட்டிருக்கிறான்.'

'பழக்கம் இல்லாட்டி எதுக்குக் குடிக்கணும்?' என்று பலராமன் சொன்னபோது, பிரபாகரன் அவசரப்பட்டுக்கொண்டு, 'சே... அவன் ஒரு ஸிப்கூட குடிச்சிருக்க மாட்டான்... அதுவல்ல காரணம்... அவனுக்கு ஏற்கெனவே சைனஸஸில் ட்ரபிள் உண்டுமாம்... பஸ் யாத்திரை செய்யும்போது இப்படி வந்து விடுமாம்' என்றான்.

'அப்படீண்ணு நான் சொல்லலே... நம்ம மேனேஜர் மாடசாமிதான் சொல்லிக்கிட்டிருந்தார்...' என்றான் பலராமன்.

இப்போது சாத்தியிருந்த கதவின் மறு பக்கத்தில் காரிடாரில் நின்றுகொண்டு கதவில் யாரோ தட்டும் சத்தம் கேட்டது.

‘எஸ்... கம் இன்...’ என்று சொன்னவாறு கதவோரத்தில் இருந்த பிரபாகரன் கதவைத் திறந்தபோது, கையில் நிறைந்த கோப்பை யுடன் பாஷா நின்று கொண்டிருந்தார். முகத்தில் அமுங்கி நிற்கும் புன்னகை... விழிகளில் அந்த ஒளி... பின்னால் தெரியும் ஹபீபின் வழுக்கைத் தலை...

‘வாங்கோ... உள்ளே வாங்கோ...’ என்று எல்லோரும் அவர்கள் இருவரையும் அமர்க்களமாய் வரவேற்றார்கள்.

‘நான் அந்த மாடசாமியைச் சும்மா விடப் போவதில்லை... நான் ஒரு பொயட்; அதோட டாக்டர் வேறு அலோ பண்ணியிருக் கார்... இவன் மட்டும் எப்படிக் குறுக்கே நிக்கலாம்...?’

ஒவ்வொரு வார்த்தையும் மிக மிக நிதானமாய், தெளிவாய் அவருக்கே உரித்தான கனவில் பேசும் தோரணையில் சொன்ன வாறு பாஷா உள்ளே நுழைந்து பிரபாகரன் பக்கத்தில் உட்கார்ந்து கொள்கிறார்.

ஹபீப் தலையைத் தடவியவாறு கண்ணாடிக்குள் குறுகுறுக்கும் விழிகளுடன் ராமாராவும், பலராமனும் உட்கார்ந்திருந்த ஸீட்டில் உட்கார்ந்து கொள்கிறார்.

‘வாஸ்தவம்... வாஸ்தவம்...’ என்று ஆமோதித்தான் பிரபாகரன். அவன் முகத்தில் வந்து விழும் தலை மயிரை மேலே தள்ளியபடி.

பாஷாவின் குரலில் ஏற்ற இறக்கம். அந்த விழிகளின் உள்ளே அமுங்கி நிற்கும் ஒரு ஸ்வப்ன அவஸ்தை... அந்த நிதானம், இவையெல்லாம் இவர் பிறவியிலேயே ஒரு கவிஞர் என்பதை அவனிடம் சொல்லாமல் சொல்லிக் கொண்டிருந்தன. அஜீத் திடம் இருந்து ஒரு சிகரெட் வாங்கிப் பற்ற வைத்து இழுத்தவாறு அவர் வார்த்தை ஒருவிதத் தாள லயத்துடன் பேசும் பாங்கில் இவன் லயித்திருந்தான்.

‘வறண்டு வெடித்த அந்தக் கட்டாந்தரை, பருபருத்த முரட்டுப் பாறையில் செதுக்கி வச்ச சிலைகள்... சீறும் கடல் – இவையெல் லாம் ஊக்குவிக்க மகாபலிபுரத்தில் வைத்து ஒரு கவிதை எழுதினேன்’ என்று அவர் சொன்னபோது, ‘ஒங்க அந்தக் கவிதையைச் சொல்லுங்கள்... நாங்க கேட்கிறோம்’ என்றான் இவன்.

‘சொல்லுகிறேன்... ஆனா... உருது உங்களுக்குப் புரியாதே... பரவாயில்லை... ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துச் சொல்கிறேன்... ஆனா அதுக்கு முந்தி இதை என்கூட ஏன் நீங்களும் பங்கு போட்டுக் கொள்ளக்கூடாது?’ என்று விட்டு கையிலிருந்த கோப்பையிலிருந்து ஒரு மடக்கு உறிஞ்சிவிட்டு அதைப் பிரபாகரனிடம் நீட்டினார். பிரபாகரன் ஒரு ஸிப் பானம் செய்து விட்டு, அஜீத்திடம், அஜீத் இவன் கையில், இவன் ஹபீபிடம், ஹபீப் பலராமனிடமும், பலராமன் ராமாராவிடமும், ராமாராவ் மறுபடியும் பாஷாவிடமும் கொடுக்கும்போது கோப்பையில் கொஞ்சம்தான் மீதியிருந்தது. அதையும் காலி பண்ணிவிட்டு மிக மெல்லிய குரலில் அவர் அந்தக் கவிதையை இசைக்கத் தொடங்கினார்.

இவன் விழிகளை மூடி, உதட்டில், தொண்டையில் லேசாய் அனுபவப்பட்ட கசப்பு, சிகரெட் புகை இவைகளின் ஊடே செவிகளில் கேட்ட அந்த வரிகளை - அது தனக்குப் புரியாத மொழி என்பதுகூட ஞாபகம் வராமல் அந்தர்முகனாகி விட்டிருந் தான். ஆங்கிலத்தில் கருத்தை மொழிபெயர்த்து விட்டு மறுபடி யும் அவர் கவிதையைத் தாளமல்லாத ஒரு தாளத்தில் இசைக்கத் தொடங்கியபோது அதன் சப்த வீசிகள் இவனைத் தாலாட்டத் தொடங்கியது.

கடலின் இசையில்
லயித்திருந்தேன்...
யாரோ அழைத்தனர்...
திரும்பினேன்...
நீயா...?
ஊஹூம்...
என்னையும்
யாரோ
அழைத்தனர்...
நீயா?
ஊஹூம்...

- இப்படியே அந்த வரிகளின் சப்த தாதுக்கள் இவன் நெஞ்சில் நிரம்பியதும் இவன் விம்மினான். ஒரு மூச்சு அழலாம்போல்... இவன் இதயத்தில் அமிர்த தாரையாய்.

யாரோ இவன் பெயரைச் சொல்லி ஒரு கவிதை சொல்லச் சொல்கின்றனர்.

இவனால் வாயைத் திறக்க முடியவில்லை.

இந்நாள் வரை படித்த பாடங்கள், எழுதிய எழுத்துக்கள் எல்லாம் மறந்துபோய் விட்டதுபோல்...

காலம் காலமாய்
யுக யுகாந்திரங்களாய்
சிலையில் கவிதையைக்
குடைந்தவனை
இவன் அகம் தேடிக் கொண்டிருந்தது

திறந்த வெளி ஹோட்டலில் வைத்து இழந்து போன இளமை யைக் குறித்து கவி பாடிய கனக குப்தாவின் ஏக்கக் குரல்....

தன்னைப் பேச வைத்துத் தன் தந்தி பாஷையில் தன் அக ஒளியைத் தரிசிக்க விழையும் சித்ரலேகா ஸ்ரீனிவாசன் ரமணிபாய்...

இவனுக்குத் திடீரென்று ஊர் ஞாபகம் வந்தது... அதோடு க்ஷேத்திராடனத்தின்போது பார்த்த மூலஸ்தானம் மறைக்கும் நந்தியையும்...

29.03.1976 - தீபம் 04.09.1976

# 15. நாகம்மாவா?

கே ட்டைத் திறந்து வெயிலில் நனைந்து மஞ்சள் மயமாய்க் கிடந்த முற்றத்தில் இரண்டு அடி எடுத்து வைத்தபோதுதான், முதன்முதலில் அந்தச் சந்திப்பு நிகழ்ந்தது.

நடுவில் சிமெண்ட் போட்டிருந்த நடை பாதையில் இடப் பக்க வெள்ளை மணலில் இருந்து நிதானமாய் ஊர்ந்து வந்து கொண்டிருந்த அது இவன் காலடி ஓசையில் வியந்து, தலை உயர்த்திப் பார்த்த பின், திரும்ப மணலுக்குச் செல்வதா, இல்லை பின்வாங்காமல் நேராகவே சென்று விடலாமா என்று ஒரு கணம் மயங்கி நிற்கும் போது...

இந்த முகச் சாயல் எங்கோ கண்டு மறைந்தது போல்...

போக்கு வெயிலில் மினுமினுத்த இந்த நிர்வாண மேனியின் கடும் மஞ்சள் வரிகளுடன் என்றோ எங்கோ வைத்து இதற்கு முன் தனக்குச் சம்போகம் சம்பவித்து விட்டிருந்ததைப்போல் ஒரு உணர்வு...

என்னவோ ஒரு முடிவுக்கு வந்ததுபோல், நிதானமாய், ஆனால், வேகமாய் நேராகவே சரசரவென்று சென்று அந்தி மந்தாரைச் செடிகளின் பச்சை மடிக்குள் அது மறையும் போது, வாட்டசாட்ட மான அந்த வாளிப்பான உடம்பு இவனை என்னவோ செய்து கொண்டிருந்தது.

சற்று நேரம்கூட மறதியின் இருளில் எதையோ துழாவுகிற வனைப்போல் அப்படியே நின்று விட்டு, அது கடந்து சென்ற பாதையில் கால் வைத்து அசுத்தப்படுத்தக்கூட அஞ்சியவனாய், காலை எட்டி வைத்து வீட்டுக்குள் நுழைந்து கதவைத் தாழிட்டான்.

தன்னைத் தேடிக்கொண்டுதான் அது வந்திருக்க வேண்டும்...

அந்தச் சந்திப்பைப்பற்றி அவன் யாரிடமும் மூச்சுக் காட்ட வில்லை. இருந்தும் இந்தச் சந்திப்பானது எதனுடையனவோ ஆரம்பமல்லவா என்ற தோரணையில் ஒரு எண்ணப் பொறி அடிவானத்தின் அப்பாலிருந்து மெல்லிசாய் வரும் இடியோசை யாய் இவன் அந்தரங்கத்தில் கேட்டுக்கொண்டிருந்தது.

மறுபடியும் இன்னொரு நாள், அது ஒரு ஞாயிற்றுக்கிழமை காலைப் பொழுது, பின் பக்க ஜன்னல் வழி அவன் பார்த்துக் கொண்டு நிற்கும்போது, கொல்லையில் அது பார்வையில் பட்டது... கடைக் கண்ணால் இவனை ஒரு தடவை பார்த்து விட்டு - பழக்கத்தைப் புதுப்பித்துக் கொள்கிறதா - சரசரவென்று கீழே பள்ளத்தில் குதித்து அந்தர்த்தியானமாகி விட்டது.

இப்போதும், அவன் அந்த ரகசியத்தை யாரிடமும் பகிர்ந்து கொள்ளவில்லை. அதன் 'பால்' சம்பந்தமாக அவனுக்குச் சந்தேகம் வரவில்லை. பெண்பால்தான்...! அதன் முகச் சாயல்தான், உள்ளங்காலில் பட்டும் படாமலும் வருடும் பறவை இறக்கையாய் அவன் நினைவுகளைக் கிசுகிசுக்க வைத்து எங்கெல்லாமோ இழுத்துக் கொண்டிருந்தது. ஏதோ ஜன்மத்தில் கண்டு மறந்த நாகம்மாவின் முகச் சாயல் அல்லவா...

இன்னொரு விடுமுறை நாள்.

மத்தியானம் சாப்பிட்டு விட்டு, கட்டிலில் படுத்தவாறு எதை யெல்லாமோ நினைத்து குழம்பிக் கொண்டிருந்தான். மனைவி சமையலறையில் பாத்திரங்களை உருட்டிக் கொண்டிருந்தாள்...

வெயிலின் வெப்பம் ஆவியாகி தகித்துக் கொண்டிருந்த வெளி யில் என்னவோ ஒரு ஆரவாரம். இவன் எழுந்து வந்து பார்த்த போது கொல்லையில் அடுத்த வீட்டுக்காரர்கள், தன் வீட்டுக்காரர் கள் பார்த்து நிற்க, ஒன்றுடன் ஒன்றாய் ஒயிலாய் இணை சேர்ந்து அமர்க்களமாய் நடந்தேறிக் கொண்டிருக்கும் நாக நர்த்தனம்... ஒன்றோடொன்றாய் ஆக்ரோஷமாய் பின்னிப் பிணைந்து நிலத்தில் இருந்து ஐந்தடி வரை தூக்கலாய் மேலெழும்பி குதித்துக் குதித்துக் குஷாலாய்க் கும்மாளம்

போடும் கோலாகல காட்சி. மோக சாந்திக்குப் பின் ஒன்று எங்கு சென்று மறைந்ததோ தெரியவில்லை. இவனுக்குப் பழக்கமானது இவனையும் இவன் மனைவியையும் கடைக் கண்ணால் பார்த்தவாறு செல்லும் போது, ஏற்கெனவே, மணமாகி இணை சேர்ந்துவிட்ட அவனைப் பழி வாங்கிவிட்ட ஒரு வெறி அதன் முகத்தில் தெறிப்பது போல்...

இவனுக்குள்ளே ஒரு சிலிர்ப்பு...

பிறகு...

அது ஒரு சித்திரை மாத ஆயில்ய நாள்... இரவு பதினொரு மணி இருக்கலாம். அறைக்குள் புழுக்கம் அகத்துக்குள் மூச்சுத் திணறல்.

கொல்லையில் தங்கமாய்க் காயும் நிலவு சாளரம் வழி தெரிந்தது. கதவைத் திறந்துகொண்டு மணலில்வந்து படுத்தபோது, பெற்ற தாயைப்போல் காற்று வந்து அன்புடன் அரவணைத்துச் சென்றது.

விண்வெளியில் பளிச்சிட்ட நட்சத்திரங்களில் ஒன்று உருகிக் கீழிறங்கி மறைந்தது.

கீழ் வானத்திலிருந்த ஒரு பஞ்சுப் பொதி மெல்ல மேலேறி வந்து, கீழிறங்கி எதிர்த் திசையில் நகர்ந்து சென்றது.

தென்னை ஓலைகளின் சலசலப்பு ஒரு சோக இசையின் அறுந்த இழைகளாய்த் தன்னை வந்து தழுவுவதைப்போல்...

யாரையோ எதையோ இறைஞ்சும் மனம்... இந்நாள் வரை வாழ்ந்த வாழ்வின் கனம்.

தலைக்கு மேல் நூலிலையில் ஊசலாடும் கூர்வாளாய் வருங் காலம்.

இருந்தும் படபடக்கும் இதயத்தைத் தளிர்க் கரத்தின் சீதளத்தால் யாரோ ஒத்தடம் போடும் ஒரு லாகவம்.

வெளியுலகின் வெட்கைத் தகிப்பில் இருந்து விடுபட்டு விமோசனம் தேட, கருப்பைக்குள் ஒளிந்துவிட மும்முரமான அந்த நாளின் நினைவு நிழலாடும் கனவு...

